4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10) மதுரை 30-8-72 புதன் (மலர் 204

## குமரி மாவட்டத்தில் சி.ஐ.டி.யூ. தமிழ் மாநிலக் குழுவின் கூட்டம்

சி. ஐ. டி. யூ தமிழ் மாநிலக் குழுவின் கூட்டம் குமரி மாவட்டத்தில் செப்டம்பர் 14 15, 16 17. ஆகிய 4 தினங்கள் நடைபெறும், இடம் பின்னர் அறிவிக்கப்படும். குழு உறுப்பினர்கள் 13—9—72 இரவிலேயே நாகர்கோவிலுக்கு வந்து சேர்ந்துவிட வேண்டும். உறுப்பினர்கள் கூட்டத்தில் கலந்து கொள்ளும் முறையில் தங்கள் வேலைகளை அமைத்துக் கொள்ள உதவும் பொருட்டே, தேதிகளை முன்னரே அறிவிக்கின்றோம். எல்லா உறுப்பினர்களும் தவறாமல் கூட்டத்தில் கலந்து கொள்ள வேண்டுகிறோம்.

ஏ. நல்லசிவன்
உதவிச் செயலாளர்
சி ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழு

மதுரை
26—8—72

## சிம்சன் தொழிலாளர் உண்ணாவிரதம்

சென்னை, ஆக 30—

சென்னை சிம்சன் கம்பெனியில் சுமார் 400 தொழிலாளர்களை சஸ்பெண்ட் செய்திருப்பதை ரத்துச் செய்யக் கோரியும், கம்பெனியின் சில யூனிட்டுகளை வேறு இடங்களுக்கு மாற்றுவதை நிறுத்தக் கோரியும் தொழிற் சங்கக் கட்டிடத்தின் முன் தோழர்கள் தேவராஜன், முனிசாமி ஆகிய இரு தொழிலாளர்கள் ஆக. 28 முதல் காலவரம்பற்ற உண்ணாவிரதம் தொடங்கினர்.

தோழர்கள் வ. பி சித்தன், முன்னாள் மேயர் எஸ். கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் உண்ணாவிரதத்தை தொடங்கி வைத்தனர்.

## கைத்தறி நெசவாளர்கள் நேரடி நடவடிக்கைக்கு ஆயத்தம்

### செப். 11ல் மதுரையில் சி. ஐ. டி. யூ. சங்கப் பிரதிநிதிகள் கூட்டம்

மதுரை, ஆக. 28—

நாட்டில் வளர்ந்துவரும் பொருளாதார நெருக்கடியால், கைத்தறி நெசவாளர்கள் மிகவும் கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளனர்.

வழக்கத்திற்கு மாறாக இந்த ஆண்டில் தீபாவளிக்குமுன்பே பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள கைத்தறி துணிகள் தேங்கிக் கிடக்கின்றன. செங்குத்தான விலைவாசி உயர்வால் பாதிக்கப்பட்டுள்ள ஏழை, நடுத்தர வர்க்க மக்களிடம் துணி வாங்கப் போதிய பணமில்லை. இந்நிலையில் நூல் விலையும் உயர்ந்துகொண்டே வருகிறது. அரை குறையாக கிடைக்கும் வேலைக்கு உள்ள கூலியும் குறைக்கப்படுகிறது.

இத்தனை இன்னல்களுக்கு ஆளாகியுள்ள கைத்தறி நெசவாளர்களை அகவிலை உயர்வு வேறு வாட்டி வதைக்கிறது.

வேறு சில ஒழுங்குபடுத்தபபட்ட தொழில்களில் பஞ்சப்படி உயர்வின் பெயரால் கிடைக்கும் தொகையைக்கொண்டு, விலைவாசி உயர்வை சிறிதளவாவது ஈடு செய்ய முடிகிறது. கைத்தறி நெசவாளர்களுக்கு அதுவுமில்லை. வேறு எவ்வித சட்டப் பாதுகாப்புமில்லை.

தமிழக ஜனத்தொகையில் 10 சத விகிதம் பேர் இந்தப் புராதன தொழிலை நம்பியே இன்று வாழ்க்கை நடத்துகின்றனர். தங்கள் உரிமைகளைப் பாதுகாக்கப் போராடிவரும் வேறு பல உழைக்கும் மக்கள் பகுதிகளைப்போல், இவர்களும் போராடாவிட்டால், நிலைமை மேலும் சீரழிவை நோக்கித்தான் செல்லும்.

இத்தகைய பயங்கர நிலைமைக்குக் காரணமான மத்திய, மாநில அரசின் கொள்கைகளை முறியடித்தாலொழிய தங்கள் பிரச்சனைக்கு பரிகாரம் கிடைக்காதென்பதை கைத்தறி நெவாளர்கள் மேலும் மேலும் உணர்ந்து வருகின்றனர்.

இந்நிலையில் சரியான கோஷங்களை உருவாக்கி தமிழகம் தழுவிய முறையில் ஒரு இயக்கத்தை நடத்துவது மிகவும் அவசியம் என்று சி. ஐ. டி. யூ.வின் தமிழ் மாநிலக்குழு கருதுகிறது. அதற்காக தமிழகத்தில் சி. ஐ. டி. யூ.வுடன் இணைந்துள்ள கைத்தறி நெசவாளர் சங்கங்களின் பிரதிநிதிகள் கூட்டம் ஒன்றை மதுரையில் 11—9—72.ம் தேதி திங்களன்று காலை 9 மணிக்கு தன் அலுவலகத்தில் கூட்டுவதென்று மாநிலக்குழு தீர்மானித்துள்ளது. இக்கூட்டத்தில் தோழர்கள் ஆர். உமாநாத்தும், வி. கார்மேகமும் கலந்து கொள்வர். ஒரு சங்கத்துக்கு இரண்டு பேருக்குக் குறையாமல் பிரதிநிதிகளை அனுப்பிவைக்குமாறு மாநிலக்குழு வேண்டிக்கொள்கிறது.

ஏ. நல்லசிவன்,
உதவிச் செயலாளர்,
சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழு.

மதுரை,
28—8—72

## ஐ. என். டி. யூ. சி. தலைமையின் துரோகம்

# தொடர்ந்து போராடுமாறு சிமெண்ட் தொழிலாளருக்கு சி. ஐ. டி. யூ. அறைகூவல்

மதுரை, ஆகஸ்ட் 27—

இடைக்கால நிவாரணமாக 25 ரூபாயை மட்டும் பெற்றுக் கொண்டு, அகில இந்திய சிமெண்ட் தொழிலாளர் பொது வேலை நிறுத்தத்தை வாபஸ் பெறுவது என்று ஐ. என். டி. யூ. சி. தலைமை முடிவு செய்துள்ளது. இந்த துரோகத்தை கண்டித்தும் தொடர்ந்து போராட முன்வருமாறு அழைப்பு விடுத்தும், சி. ஐ. டி. யூ. தமிழ்நாடு குழுவின் தலைவர் தோழர் கே. ரமணி பின்கண்ட அறிக்கையை வெளியிட்டுள்ளார்:-

21—8—72-ம் தேதி அன்று டெல்லியில் நடைபெற்ற சமரசப் பேச்சு வார்த்தைகளின்போது, மத்திய தொழிலாளர் நல மந்திரி திரு. கடில்கர் ஒரு சமரச திட்டத்தை முன்வைத்தார். அதைக்கூட முதலாளிகள் ஏற்றுக்கொள்ளாமல், மறுநாள் பிரதம மந்திரியை சந்தித்து முறையிட்டனர்.

அதன்பின், பிரதம மந்திரி இந்த பிரச்சனையில் தலையிட்டு, இடைக்கால நிவாரணம் மட்டும் பெற்றுக்கொண்டு வேலை நிறுத்தத்தை வாபஸ் பெறும்படி ஐ என் டி யூ சி தலைவர்களை நிர்ப்பந்திக்க ஆரம்பித்தார். ஒவ்வொரு தொழிலும் நடைபெறும் வேலை நிறுத்தத்துக்கு தாம் பணிய முடியாதென்றும், நாட்டின் ஒட்டு மொத்தமான பொருளாதார நிலைமையை கணக்கிலெடுத்துக்கொண்டு, ஒரு தேசிய ஊதியக் கொள்கையை மத்திய அரசு வகுக்குமென்றும் அதுவரை சம்பள விகிதங்களை மாற்றியமைக்கும் கோரிக்கைகளைக் கைவிடும்படியும் பிரதம மந்திரி வற்புறுத்தினார்.

உழைக்கும் மக்களுக்கு ஊதிய உயர்வு கொடுப்பதால்தான் விலைவாசி உயர்கின்றன என்ற முதலாளிகளின் வாதத்தைத்தான் பிரதம மந்திரி, இனிப்பு மேற்பூச்சுக் கொண்ட விஷ உருண்டையாகத் தருகிறார் என்பது தொழிலாளர்களுக்குத் தெரியும்.

### ஐ என் டி யூ சி துரோகம்

சிமெண்ட் முதலாளிகள், பிரதம மந்திரி ஆகியோரின் நிர்ப்பந்தத்துக்கு இரைய கி, இந்த பொதுவேலை நிறுத்தத்தை வாபஸ் பெற்றதன் மூலம் ஐ என் டி யூ சி தலைமை சிமெண்ட் தொழிலாளர்களுக்கு மட்டுமல்லாமல் இந்திய தொழிலாளி வர்க்கத்துக்கே பெரும் துரோகம் இழைத்துள்ளது ஆளும் வர்க்கங்களின் ரப்பர் ஸ்டாம்புதான் அது என்பதை மீண்டும் ஒரு முறை ஊர்ஜிதம் செய்துள்ளது.

### சம்பிரதாய அழைப்பு

செப்டம்பர் மாதம் 3-ந் தேதி அகில இந்திய

(4-ம் பக்கம் பார்க்க)

# அமைச்சர் எல். என். மிஸ்ரா மன்னிப்புக்கேட்டார்

### தோழர் ஜோதிர்மாய்பாசுவுக்கு கடிதம்

புதுடெல்லி ஆக 29—

இந்திய தேயிலை போர்டில் நாடாளுமன்றத்தின் பிரதிநிதிகளாக தோழர் ஜோதிர்மாய் பாசுவும், ஸ்ரீ பி. சாஸ்திரியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆனல் அவர்களை அழைக்காமலேயே தேயிலை போர்டின் நிர்வாகக் குழு உறுப்பினர்களும், மற்ற குழுக்களின் பிரதிநிதிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டனர்.

இதுபற்றிதோழர்ஜோதிர்மாய்பாசு நாடாளுமன்றத்தில் உரிமை பிரேரணை கொண்டு வந்து தேர்ந்தெடுக்கப்பட்ட குழுக்களை கலைக்குமாறு வலியுறுத்தினர்.

இச்சம்பவம் குறித்து நாடாளுமன்றத்தில் அன்னிய வர்த்தகத்துறை அமைச்சர் எல். என். மிஸ்ரா பகிரங்க மன்னிப்பு கேட்டார். இதுபற்றிய விவரம் வருமாறு:-



ஜோதிர்மாய்பாசு

இந்திய தேயிலை போர்டிற்கு, வரும் மூன்றுண்டுகளுக்குநாடாளுமன்றத்தின் பிரதிநிதிகளாக மே. 17ம் நாள் தோழர் ஜோதிர்மாய் பாசும், பி. சாஸ்திரியும் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இந்தச் செய்தியை அன்னிய வர்த்தகத்துறை அமைச்சகத்திற்கு அன்றைக்கே நாடாளுமன்றச் செயலகம் தெரிவித்துவிட்டது! இந்தச் செய்தியை அன்னிய வர்த்தகத்துறை அமைச்சர் மே மாதம் 19ம் தேதி பெற்றிருக்கிறார் இச்செய்தி மே 18ம் தேதி நாடாளுமன்ற செய்தித்தாளிலும் வெளியாகியுள்ளது.

### அழைக்காதது ஏன்?

இந்த செய்தி வெளியாகி 15 நாட்கள் ஆனபின்பு, இந்திய தேயிலை போர்டுத் தலைவரால் ஜூன் 5-ம் தேதி ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. அந்தக் கூட்டத்தில் தான் வரும் மூன்று ஆண்டுகளுக்கான நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்களும், மற்ற கமிட்டிகளின் உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இந்த கூட்டத்தில்கலந்து கொள்ள அழைக்கப்படாததின்மூலம் எங்களதுவாக்குகளை நாங்கள் விரும்பியவர்களுக்கு அளிக்கவும் நாங்கள் பிரதிநிதிகளாக நிற்கவும், உரிமைகள் மறுக்கப்பட்டிருக்கிறது.

எனவே அன்னிய நாட்டு வர்த்தகத்துறைஅமைச்சர், தேயிலை போர்டு தலைவர் ஆகியோர்மீது உரிமை பிரேரணை கொண்டு வருகிறேன். ஏனெனில் தேயிலை போர்டில் நாடாளுமன்றத்தின் பிரதிநிதிகளாக நாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறோம். எங்களை அழைக்காததின் மூலம் நாடாளுமன்றமே அவமதிக்கப்பட்டிருக்கிறது என்று தோழர் ஜோதிர்மாய்பாசு உரிமைப் பிரேரணை கொண்டுவரும்போது குறிப்பிட்டார்.

### மந்திரி மன்னிப்பு கேட்டார்

நாடாளுமன்றத்தில் இச்சம்பவத்திற்கு உடனே அன்னிய வர்த்தக அமைச்சர் மன்னிப்புக்கேட்டார். அண்மையில் இதுபற்றி அன்னிய வர்த்தக அமைச்சர் தோழர் ஜோதிர்மாய்பாசுவிற்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார், அக்கடிதம் வருமாறு:-

தட்டெழுத்துப் பிழையினுல் ஏற்பட்ட தவறுக்கு மன்னிப்புதெரிவித்து எனது முன்னைய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன்.

நான் முன்பே நாடாளுமன்றத்தில் தெரிவித்தது போல, நாடாளுமன்ற உறுப்பினர்களின் மீது எனக்கு முழு மதிப்பும் உண்டு, அவர்களை அவமதிப்பதென்பது எனது எண்ணத்திற்கே அப்பாற்பட்டது.

நாடாளுமன்றத்தினுல் முறையாக தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த இரு உறுப்பினர்களும் இந்திய தேயிலை போர்டின் முதல் கூட்டத்திற்கு அழைக்கப்படவில்லை. இதன் மூலம் பல்வேறுகுழுக்களுக்கு நடைபெற்ற தேர்தல்களில் அவர்கள் கலந்துகொள்ள இயலாமல் போய்விட்டது.

சாதாரணமாக அரசு இதுபோன்ற சட்ட பூர்வமான போர்டு, அல்லது கமிட்டிகளின் பணிகளிலும் நடவடிக்கைகளிலும் தலையிடுவதில்லை.

### ரத்து செய்யப்பட்டது

எனினும் தாங்கள் இது விஷயத்தில் கவனிக்குமாறு வலியுறுத்தியதை முன்னிட்டு—நான் இதில் விசேஷ கவனம் செலுத்தி, 1953-ம் ஆண்டின் 31(1) தேயிலைச் சட்டப் பிரிவின்படி ஜூன் மாதம் 5ம் தேதி நடைபெற்ற கூட்டத்தின் நடவடிக்கைகளை ரத்து செய்யுமாறு உத்தரவிட்டுள்ளேன்.

மேலான உறுப்பினர் அவர்கள், ஜூன் 5-ம் தேதி நடைபெற்ற நிர்வாக கமிட்டி மற்றும் பல்வேறு கமிட்டிகளின் தேர்தல்களில் கலந்து கொள்ளும் உரிமை மறுக்கப்பட்டிருக்கிறது என்று மட்டும் குறிப்பிட்டிருந்தார் எனினும் அந்தக்கூட்டத்தில் மேலான உறுப்பினர்கள் கலந்து கொள்ளாமல் பல முக்கியமான முடிவுகள் எடுக்கப்பட்டன என்று எதிர்காலத்தில் எத்தகைய புகார்களும் வரக்கூடாது என்பதால் அந்தக்கூட்டத்தின் எல்லா நடவடிக்கைகளையுமே நீக்க உத்திரவிட்டுள்ளேன்.

மேலும் அன்னிய வர்த்தகதுறை அமைச்சரகத்தின் கீழ் இருக்கும் போர்டுகளில் நாடாளுமன்ற உறுப்பினர்கள் நியமிக்கப்பட்டால்—அவர்களுக்குதெரிவிக்காமல் இனிமேல் எத்தகைய கூட்டமும் எதிர்காலத்தில் நடக்கக்கூடாது என்று உத்திரவிட்டுள்ளேன் என்று தெரிவிக்க விரும்புகிறேன்.

இவ்வாறு தனதுகடிதத்தில் அமைச்சர் எல் என் மிஸ்ரா குறிப்பிட்டுள்ளார்.

### இலங்கை திருத்தல்வாத கட்சியில் பிளவு

கொழும்பு ஆக 28—

இலங்கை அரசாங்கத்தின் பத்திரிக்கைக் கவுன்சில் மசோதா பாசிஸ்ட் தன்மை வாய்ந்தது என்று இலங்கையின் திருத்தல்வாத கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் டாக்டர் எஸ். ஏ. விக்ரமஸிங்கே அறிவித்துள்ளார்.

இந்த மசோதா அரசாங்கச் செய்திகளைப் பிரசுரிக்கும்முன் பத்திரிக்கைகள் அரசாங்கத்தின் அனுமதி பெறவேண்டும் என்று விதிக்கிறது.

இதற்கு நாட்டில் பெரும் எதிர்ப்பு ஏற்பட்டு சிவில் உரிமை இயக்கம் இதை எதிர்த்து நீதி மன்றத்தில் வழக்காடத் தீர்மானித்துள்ளது.

திருமதி பண்டாரநாயகா அரசாங்கத்தில் திருத்தல்வாத கம்யூனிஸ்ட் கட்சியை சேர்ந்த பீட்டர்கெனமன் அமைச்சராக இருக்கும் போதே விக்ரமஸிங்கே இவ்வாறு எதிர்ப்புத் தெரிவித்திருப்பது அந்தக் கட்சியில் கடும் பிளவு ஏற்பட்டிருப்பதை எடுத்துக் காட்டுகிறது.

அண்மையில் நடந்த இலங்கை திருத்தல்வாதக் கம்யூனிஸ்ட்கட்சி மாநாட்டில் விக்கிரமசிங்கே கோஷ்டிக்கும் பீட்டர் கெனமன் கோஷ்டிக்கும் ஏற்பட்ட மோதலில் விக்கிரசிங்கேயின் கோஷ்டியின் கையே ஓங்கி நின்றது. சுட்சிக் கமிட்டிக்கான தேர்தலிலும் விக்கிரமசிங்கே கோஷ்டியே வெற்றிபெற்றது.

இதன்மூலம் இலங்கை அரசாங்கத்திடம் கட்சியின் அணுகும் முறையில் பெரும் மாறுதல் ஏற்படும் என்று கருதப்படுகிறது

### அரிசி விலை கிடுகிடு உயர்வு படி 5 ரூபாய்

முர்ஷிதாபாத், ஆக. 29—

மேற்கு வங்கத்திலுள்ள முர்ஷிதாபாத்தில் அரிசி படி ரூபாய் ஐந்துக்கு விற்கப்படுகிறது. (கிலோ ரூ 3லிருந்து ரூ 3-20)

இந்த ஜில்லா, வறட்சியின் கோரப்பிடியில் சிக்கியுள்ளது. மக்கள் உணவுப் பொருள்இல்லாமல் வாங்க வசதியும் இல்லாமல் வாடி வதங்கிக் கொண்டிருக்கும் வேளையில், அரிசி கள்ள மார்க்கட்டில் கிலோ ரூ 3லிருந்து 3-20 வரை விற்கப்படுகிறது.

இதனைஎதிர்த்து, பசியால் வாடும் மக்களும், விவசாயிகளும், பெர்ஹாம்பூரில், ஆகஸ்டு 5-ம் தேதி ஆர்ப்பாட்டம் நடத்தச் சென்றனர்.

அப்போது முதல் மந்திரி சித்தார்த்தசங்கர்ரே அங்கு தங்கியிருந்தார். ஆகையால், ஆர்ப்பாட்டக்காரர்களை, பல்தங்கலி என்னும் ஊரில் வழிமறித்து பெர்ஹாம்பூரில் போலீஸ் தடை உத்திரவு இருப்பதாக அறிவித்துவிட்டது அரசு.

# தீக்கதிர்

## சிமெண்ட் தொழிலாளர்களே தொடர்ந்து போராடுக!

கடந்த இரு வாரங்களாக நாடெங்கும் 75 ஆயிரம் சிமெண்ட் தொழிலாளர்களின் வேலைநிறுத்தப் போராட்டம் மிகவும் கட்டுப்பாடாக நடைபெற்று வருகிறது.

21—8—72-அன்று மத்திய தொழிலாளர் அமைச்சர் கடில்கார் ஒரு முத்தரப்புக் கூட்டத்தைக் கூட்டி பேச்சு நடத்தினர்.

இந்தக் கூட்டத்தில் சிமெண்ட் தொழிலாளர் போராட்டத்துக்குத் தீர்வுகாண ஒரு யோசனையையும் அவர் வெளியிட்டார்.

1960ல் விலைவாசியை அடிபபடையாகக் கொண்ட வாழ்க்கைச் செலவு புள்ளி 183க்கு இருக்கும்போது சிமெண்ட்தொழிலாளர் குறைந்தபட்ச சம்பளம் ரூ230ஆக இருக்கவேண்டும். அதற்குமேல் ஏறும் ஒவ்வொருவிலைவாசிப்புள்ளிக்கும் ரூ 1-25வீதம் கிராக்கிப்படி அளிக்கவேண்டும். இந்தச் சம்பள விகிதத்தை 1-1-73 முதல் அமுல் நடத்த வேண்டும். இதற்கிடையில் இடைக்கால நிவாரணமாக 1-7-72முதல் ரூ 25 அளிக்கவேண்டும் என்பதே அந்த யோசனை.

இந்நிலையில் பிரச்னைக்குத் தீர்வுகாண தொழிலாளர் பிரதிநிதிகள் எவ்வளவோ முயன்று பார்த்தனர்.

ஆனல் கொள்ளை லாபம் அடித்திருக்கும் சிமெண்ட் ஆலை முதலாளிகளின் பிரதிநிதிகள் அமைச்சரின் இந்த யோசனையைக்கூட ஏற்க மறுத்தனர்.

கடில்காரின் திட்டத்தை எதிர்த்து, பிரதம மந்திரி இந்திரா காந்தியிடம் இப்பிரச்னையை அவர்கள் கொண்டு சென்றனர்.

சமரசப் பேச்சு நடத்துவதற்கு தொழிலாளர் பிரதிநிதிகளை டில்லிக்கு அழைத்த பிரதம மந்திரி இந்திராகாந்தி நியாயமான தீர்வு காண்பதற்கு முற்படவில்லை.

மத்திய அரசாங்கத்தில் ஒரு அமைச்சராக இருக்கும் கடில்கார் வெளியிட்ட திட்டத்தைக்கூட பிரதம மந்திரி இந்திராகாந்தி குப்பைத் தொட்டியில் வீசி எறிந்துவிட்டார்.

தொழிலாளர்கள் தங்களுடைய கோரிக்கைகளைக் கைவிட வேண்டும் என்று பிரதம மந்திரி இந்திராகாந்தி அறிவித்துள்ளார்.

"நான் சிமெண்ட் தொழிலாளர்களின் கருத்தைப் புரிந்துகொள்ளுகிறேன். ஆனல் தற்போதைய பொருளாதார நிலைமையின் பின்னணியில்தான் தொழிலாளர்கள் தங்களுடைய கோரிக்கைகளை முன்வைக்க வேண்டும்" என்று பிரதம மந்திரி பேசியிருப்பது பத்திரிகைகளில் வெளிவந்துள்ளது.

பிரதம மந்திரி இந்திரா யார் குரலில் இப்படி பேசியுள்ளார் என்பதை இந்தப்பேச்சு தெட்டத்தெளிவாக்கக்காட்டியுள்ளது.

பிரதம மந்திரியின் இறுதி முடிவை தாம் ஏற்றுக்கொள்ளத் தயாராயிருப்பதாக ஐ. என். டி. யூ. சி. சங்கத் தலைவரான எச். என். திரிவேதி அறிக்கை விடுத்திருப்பதாகவும் பத்திரிகைகளில் செய்தி வந்துள்ளது.

சிமெண்ட் தொழிலாளர் சங்கங்களின் கூட்டுப் போராட்டக் கமிட்டியே வேலை நிறுத்தத்தை நடத்திக் கொண்டிருக்கையில் யாரையும் கலக்காமல் திரிவேதி அறிக்கை விடுத்திருப்பது தொழிலாளர் நலனை உதாசீனப்படுத்தும் நடவடிக்கையேயாகும்.

திரிவேதியின் இந்தத் தொழிலாளி வர்க்க விரோதப்போக்கை ஐ.என்.டி.யூ.சி. சங்கத்தைச்சேர்ந்த தொழிலாளர்களும் எதிர்த்து நின்று தங்களுடைய போராட்ட ஒற்றுமையை நிலைநாட்டுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். தங்களுடைய நியாயமான கோரிக்கைகள் ஏற்கப்படும்வரை சிமெண்ட் தொழிலாளர்கள் தொடர்ந்து போராட வேண்டும் என்று அறைகூவி அழைக்கிறோம்.

## கால்நடை உதவியாளர்சங்கம் கண்டனம்

திண்டுக்கல், ஆக. 29—

திண்டுக்கல் கோட்ட கால்நடை உதவியாளர்கள் சங்க பொதுக்குழுக் கூட்டம் மதுரை மாவட்டச் செயலாளர் திரு பா சண்முகவேலு தலைமையில் நடைபெற்றது.

### தீர்மானங்கள்

கால்நடை உதவியாளர்களுக்கு 'தனிநபர் குழு' அநீதி இழைத்துவிட்டது. சங்கத்திற்கு அரசு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை. இதனை எதிர்த்து உறுதியான நடவடிக்கை எடுக்குமாறு மாநிலச் சங்கத்தை இக்கூட்டம் கேட்டுக்கொண்டது.

கால்நடை உதவி மருத்துவர்கள சங்கம், கால்நடை ஆய்வாளர்கள் சங்கம் கால்நடை உதவியாளர்கள் சங்கம், கால்நடை பணியாளர்கள்சங்கம் ஆகிய அனைத்தும் ஒன்றிணைந்து நடவடிக்கையில் இறங்க வேண்டுமெனவும் கூட்டம் முடிவு செய்தது.

# சங்ககிரி ஐ. என். டி. யூ. சி. முகமூடி கிழிகிறது

சங்ககிரி, ஆக. 28—

சங்ககிரி சிமெண்ட் ஆலையில் பழிவாங்கப்பட்ட 24 தொழிலாளர்கள் பிரச்சினையை ஐ. என். டி. யூ. சி. சங்கம் காட்டிக் கொடுத்துவிட்டது.

தொழிலாளர்களுக்கு வழிகாட்டும்படி ஐ என் டி யூ சி மாநிலத் தலைமையை முன்னேற்ற சங்கம் அழைத்ததற்கு பதிலே எழுதவில்லை. அதற்கு ஐ என் டி யூ சி செயலாளர் எஸ் கே பழனியப்பன் பதில் கூறும் போது 'எங்களுக்குவேறுவேலையே இல்லையா...? சி ஐ டி யூ காரர்களுக்கு வேறு வேலையில்லாமல் வந்து கிடக்கிறார்கள்'' என்று கூறினராம். உதவி கேட்கும் தொழிற்சங்கத்திற்கு ஒரு தொழிற்சங்க வாதி கூறும் பதில் இதுதானே?

மேலும் தங்கள் சங்கத்தைச் சார்ந்த 7-பேர்கள் 1968-ல் வேலை நீக்கம் செய்யப்பட்ட போது தாங்கள் யாருடைய உதவியையும் கோராமல் தனித்து நின்றே வெற்றி பெற்றதாக ஐம்பம் அடித்துக் கொண்டாராம். அவர் தம்பட்டம் அடிக்கும் 7-4-1969-ம் தேதிய ஒப்பந்தம் செய்துள்ள துரோகத்தை தொழிலாளர்கள் மீண்டும் ஞாபகப்படுத்திப் பார்ப்பது அவசியம்.

### 800 தொழிலாளர்களுக்கு நிரந்தர வேலையில்லை

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழுவின் தலைவர் தோழர் கே. ரமணியிடம் கலந்து கொண்டு ஐ என் டி யூ சியைச் சேர்ந்த நாராயணன் உருவாக்கிய வேலை நிறுத்த நோட்டீஸில் சுண்ணாம்புக் கல்லை தோண்டி எடுப்பதற்கும், ஏற்றுமதி செய்துகொண்டு செல்வதற்கும் காண்டிராக்டர்களை பயன்படுத்தக் கூடாது என்றும், கம்பெனியே இந்த வேலையை நேரடியாகச் செய்து கொள்ள வேண்டுமென்றும் திட்டவட்டமாகக் கோரியிருக்கிறார்.

ஆனல் அவர் செய்துள்ள ஒப்பந்தத்தின் 6-வதுஷரத்து கூறுவதென்ன...? சுண்ணாம்புக்கல்லை தோண்டி எடுக்கும்போது மண்ணையும், கழிவுகற்களையும் இதர வேண்டுகளையும் அப்புறப் படுத்தும் பொறுப்பை சப்-காண்டிராக்டர்களிடம் நிரந்தரமாக விடுவதற்கு ஸ்டார் நிர்வாகத்திற்கு உரிமை உண்டு என்று அந்த ஒப்பந்த ஷரத்து கூறுகிறது இந்த வேலைகளில்இப்போது சுமார் 800 தொழிலாளர்கள் ஈடுபட்டிருக்கின்றனர். இவர்களை நிரந்தரத்தொழிலாளர்களாக்க வேண்டும் என்று அந்த ஒப்பந்தத்தில் திரு நாராயணன் வற்புறுத்தாதது ஏன்...? அந்த வேலைகள் நிரந்தரமான வேலைகள் தானே! அதில் வேலை செய்பவர்களும்நிரந்தரமானவர்களாகத்தானே இருக்க வேண்டும்! ஏசிப்பேசுவதை விட்டு விட்டு ஐ. என். டி. யூ. சி இதற்கு பதில் சொல்ல வேண்டும்.

### வேண்டியவர்களுக்கு சலுகை

இவ்விதம் சப்-காண்டிராக்டர்களிடம் வேலைசெய்பவர்களின் பட்டியல் ஒன்றை தயார் செய்து அதன் நகல் ஒன்றை ஸ்டார் நிர்வாகம் தொழிற்சங்கத்திடம் கொடுக்கவேண்டும் என்றும், நிரந்தர வேலைகள் காலியாகும் போது இந்தப் பட்டியலிலிருந்து சர்வீஸ் அடிப்படையில் ஆட்களை எடுக்கவேண்டும் என்றும் ஒப்பந்தத்தின் 7வதுஷரத்து கூறுகிறது.

இந்தப்பட்டியலை ஐ.என். டி. யூ. சி சங்கத்திலேயே பகிரங்கமாக என்றைக்காவது தொங்கவிட்டதுண்டா......? இடையாது. அதிக சர்வீஸ் உள்ளவர்களை எடுக்காமல் கம்பெனி அதிகாரிகளுடன் பேரம் பேசி குறைந்த சர்வீஸ்காரர்களையும்—தங்களுக்கு வேண்டியவர்களையும்—உறவினர்களையும் வேலைக்கு எடுத்திருப்பதை மறுக்க முடியுமா...?

இந்தத் தலைவர்கள் சொன்னபடி கேட்டால்தான் தங்களையும் வேலைக்கு எடுப்பார்கள் என்று எண்ணி நூற்றுக்கணக்கான சப்-காண்டிராக்ட் தொழிலாளர்கள் இவர்கள் செய்கின்ற தவறுகளை தட்டிக் கேட்க முடியாமல் பயந்து இருப்பதும் உண்மையல்லவா...?

7—4—1969 ஒப்பந்தத்தில் சுண்ணாம்புக் கல்லை குவாரியிலிருந்து ஆலைக்குக் கொண்டு செல்லும் பொறுப்பை 31-10-1973 வரை ஸ்டோர் நிர்வாகமே நேரடியாக ஏற்க வேண்டுமென்றும், அந்த வேலையை சப்-காண்டிராக்டர்கள் செய்து வந்தால் 1969 ஆகஸ்டு மாதத்திற்கு முன்பு சப்-காண்டிராக்டுகளை ஒழித்து விடவேண்டும் என்றும் ஒப்பந்தத்தின் 5வது ஷரத்து கூறுகிறது.

ஆனல் இதற்கு மாருக 9—8—1969ல் ஒப்பந்த விளக்கம் என்று எழுதிக்கொண்ட ஒரு தஸ்தாவேஜில் 10 சிவில் லாரிகள் வரை நிர்வாகம் வாடகைக்கு அமர்த்திக்கொள்ளலாம் என்று ஒப்பந்தம்செய்தது ஏன்...? இதில் திரு நாராயணனும், திரு பழனியப்பனும் கையெழுத்திட்டிருப்பது உண்மையா? இல்லையா? சிவில் லாரிகள் அமர்த்தப்படாமல் இருந்திருந்தால் இன்னும் அதிகமான தொழிலாளர்கள், டிரைவர்களாகவும், ஹெல்பர்களாகவும் நிரந்தரப் படுத்தியிருக்கலாம் அல்லவா ...?

### போனஸ் குறைந்தது

1966—67-ல் குவாரித் தொழிலாளர்கள் 20 சத போனஸ் பெற்றார்கள். ஆனல் 1967-68 போனஸ் பிரச்சினையை கோர்ட்டுக்கு விடுவதற்கு மேற்படி ஒப்பந்தம் மூலம் ஐ என் டி யூ சி தலைவர் நாராயணன் சம்மதித்தார்.

அதனல் அந்த ஆண்டு குவாரிதொழிலாளர்களுக்கு 4 சதவீத போனஸ் மட்டுமே கிடைத்தது ஆனல் அதே ஆண்டில் ஆலைத் தொழிலாளர்கள் முன்னேற்ற சங்கத் தலைமையில் போராடி 20 சத வீத போனஸ் பெற்றனர். நீங்களும் அந்த ஆண்டில் சேர்ந்து போராடாமல் தொழில் கோர்ட்டுக்கு விடச் சம்மதித்தது ஏன்...?

இப்படி யெல்லாம் ஐ என் டி யூ சி சங்கம் விட்டு கொடுத்ததற்கு ஒரே காரணம் தான் உண்டு. மற்ற தொழிலாளர்களுடன் சேர்ந்து, நின்று போராடி முதலாளியை பணிய வைப்பதற்கு பதிலாக, சங்கமுக்கியஸ்தர்கள் 7 பேர் வேலையைப் பாதுகாக்க அடிப்படை உரிமைகளை விட்டுக் கொடுத்தார்கள். அப்படி இருக்க தனித்து நின்று போராடி வெற்றிபெற்றதாக வாய்ச் சவடால் அடிப்பது யாரை ஏமாற்ற?

### மதுக்கரையிலும் சங்ககிரியிலும் சம்பள விகிதம்

மேற்படி ஒப்பந்தத்தில் பிரேக்கர், டிரில்லர், பிளாஸ்டர், லோடர், ஆகியோருக்கு அடிப்படை சம்பளம்—பஞ்சப்படி முதலியவற்றை திட்டவட்டமாக குறிப்பிடவில்லை. சங்ககிரி இந்தியா சிமெண்ட் கம்பெனியின் நிரந்தரத்தொழிலாளர்களுக்கு கொடுப்பது போல் கொடுக்கப்படும் என்றுஒப்பந்தம் கூறுகிறது. ஆனல்சங்ககிரியில்கம்பெனியின் நேரடிப் பொறுப்பில் குவாரிகள் எதுவும் வேலை செய்யப்படவில்லை. அப்படியானல் இவர்களுடைய சம்பளம் பஞ்சப்படி எவ்விதம் நிர்ணயிக்கப்பட்டது? மதுக்கரையில் இத்தகைய தொழிலாளர்களுக்கு கிடைக்கும் சம்பள விகிதங்களோடு தாங்கள் பெறும் சம்பளத்தை இவர்கள் ஒப்பிட்டுப்பார்த்தால் உண்மை தெரியவரும்!

குவாரியில் ஸ்டார் நிர்வாகத்தின் கீழ் கே. டி. பி. என்ற ஒரு சப்-காண்டிராக்ட் நிறுவனம் உள்ளது அவர்கள் எவ்வளவு அதிகமான தொழிலாளர்களை வைத்து வேலை வாங்கினலும் குறைந்த தொழிலாளர்களைத்தான் ரெஜிஸ்டரிலக்கணக்கு காட்டுவார்கள்.

### மற்ற காண்டிராக்ட் தொழிலாளர்களை சேர்ப்பதில்லை

இந்தக் கம்பெனியில் டிரைவர், கிளீனர் மெக்கானிக்குகள் போன்றவர்கள் 30 பேர்களுக்கு மேல் உள்ளனர் இவர்களையும் இக்கம்பெனியில் உள்ள மற்ற தொழிலாளர்களையும் சமீபகாலம் வரை ஐ என் டி யூ சி சங்கத்தில் சேர்க்க மறுத்து வந்தார்கள் அப்படிச் சேர்த்தால் ஸ்டார் கம்பெனியில் உள்ளது போன்ற சம்பள விகிதங்களை அவர்களுக்கும் கொடுக்கும்படி போராட வேண்டிவரும். ஆனல் காண்ட்டிராக்ட் கம்பெனியின் சொந்தக்காரர் ஐ என் டி யூ சித் தலைவர்களுக்கு மிகவும் வேண்டியவர். எனவே இதுவரை அந்த தொழிலாளர்கள் சங்கத்தில் சேர்க்கப்படவில்லை ஆனல் குவாரியில் சிஐடியூ சங்கம் செயல்பட ஆரம்பித்தவுடன் அந்த தொழிலாளர்கள் சி ஐ டி யூ சங்கத்திடம் போய்விடுவார்களோ என பயந்து அவர்களில் சிலரை ஐ என் டி யூ சியில் சிலரை சேர்த்துள்ளனர் ஆனல் டிரைவர், கிளீனர், மெக்கானிக் முதலியவர்களை இன்னும் சேர்க்கவில்லை. ஐ என் டி யூ சி தலைவர்கள் தொழிலாளர்கள் பக்கம் நிற்பதையா இது காட்டுகிறது...?

### இதுதான் தொழிற்சங்க சேவையா?

இப்போது வேலை நிறுத்தம் நடைபெறுகிறதுநியாயமான கோரிக்கைகளை மறுத்ததன் மூலம் இந்த வேலை நிறுத்தத்திற்கு முதலாளிகள்தான் காரணம் எனவே வேலை நிறுத்தத்திற்கு முழுச் சம்பளம் தரவேண்டுமென்று கூறி மற்ற எல்லா தொழிற் சங்கங்களுடனும்சேர்ந்துநின்று போராடுவது அவசியம் அதை விட்டுவிட்டு குவாரித் தொழிலாளர்கள் தினசரி குவாரிக்கு வரவேண்டும் என்றும் அப்படி வந்து சங்கத்தில் கையெழுத்து போட்டால்தான் முழுச்சம்பளம் கிடைக்கும் என்று கூறி தொழிலாளர்களை ஐ என் டி யூ சி தலைவர்கள் ஏமாற்றுகின்றனர்.

தொழிலாளர்களுக்குஉண்மையான விவரங்களைச் சொல்லி அவர்களுடைய பொது அறிவை வளர்க்காமல் இப்படி பின் தங்கிய நிலைமையில் வைத்து ஏமாற்றுவதுதான் தொழிற் சங்க சேவையா...?

குவாரியில் சி ஐ டி யூ பலப்பட்டால் மீனுக்கு தலையும் பாம்புக்கு வாலையும் காட்டுவதுபோல் தொழிலாளிக்கும் நண்பன் முதலாளிக்கும், காண்ட்ராக்டர்களுக்கும் தோழன் என இவர்கள்போடும் இரட்டை வேடம் கலைந்து போய்விடும் என்ற பயத்தில்தான் ஐ என் டி யூ சி தலைவர்கள் இவ்விதம் நிதானமிழந்து வெறித்தனமாக பேசுகிறார்கள்.

பழி வாங்கப்பட்ட 24 தொழிலாளர்கள் பிரச்சனை தீர்ந்து கிடந்ததை சி. ஐ. டி. யூ. பொறுப்பேற்று இந்த போராட்ட நிலைக்கு கொண்டு வந்துள்ளதால் இனி இப்பிரச்சனை வெற்றிகரமாக முடிந்தால் சி ஐ. டி யூ செல்வாக்கு அதிகரிக்கும் என்றுபயந்தே அப்பிரச்சனைக்கு வேட்டு வைக்கவே தொழிலாளர்களின்ஒன்றுபட்டபோராட்டம் உருவாக விடாமல் தடுக்க முயற்சிக்கின்றனர்.

எனவே அகில இந்திய பிரச்னைகள் தீர்ந்து விட்டாலும் கூட அவசியமானல் பழிவாங்கப்பட்ட தொழிலாளர்கள் பிரச்சனைக்காக தொடர்ந்து போராட ஆலைத்தொழிலாளர்கள் தயாராகி வருகின்றனர். கட்சி சங்க வித்தியாசம் பாராமல் சகோதர தொழிற்சங்க ஊழியர்களை பழிவாங்க அனுமதியோம் என உறுதிகொண்டு இந்த முக்கியமான பிரச்சனையில் ஆலைத்தொழிலாளர்களுடன் தோளோடு தோள் கொடுத்து ஒன்றுபட்டு போராடமுன்வரவேண்டும்.

—நமது நிருபர்

# ஊதிய உயர்வு பயணப்படி வழங்குக

## சுகாதாரப் பணியாளர்கள் சங்கம் வலியுறுத்தல்

மதுரை, ஆக. 27—

சுகாதாரப் பணியாளர்களுக்கு ஊதியத்தை உயர்த்தக்கோரியும், பயணப்படி வழங்கக்கோரியும் தமிழ்நாடு அடிப்படைச் சுகாதாரப் பணியாளர் சங்கத்தின் மதுரை மாவட்டச் செயலாளர் திரு பி. தினகர் அறிக்கை விடுத்துள்ளார்;-

தமிழகத்தில் சுமார் 5000க்கும்மேற்பட்ட அடிப்படைச் சுகாதாரப் பணியாளர்கள் பணியாற்றுகின்றனர். இவர்களின் அடிப்படை ஊதியம் மிகவும் குறைவாக ரூ. 70-என்று உள்ளது. மேலும் இவர்கள் கிராமங்களுக்குச் சென்று பணிபுரிகின்றனர்.

அதற்கு எவ்விதப்பயணப் படியும் (எம். டி ஏ அல்லது எப். டி. ஏ.) வழங்கப் படவில்லை இதை அரசு ஏற்படுத்தியிருந்த ஒரு நபர் குழுவிற்கு மதுரை என். ஜி. ஓ. யூனியன் மூலம் அடிப்படைச் சுகாதாரப் பணியாளர் சங்கம் அறிக்கை அனுப்பியது.

ஆனல் சமீபத்தில் வெளியான ஒரு நபர் குழுவின் அறிக்கை அடிப்படைச் சுகாதாரப் பணியாளர்கள் மத்தியில் மிகுந்த மனவேதனையைத் தருகின்றது. ஒரு நபர்குழு அறிக்கையை மதுரை மாவட்ட அடிப்படைச் சுகாதாரப் பணியாளர் சங்கம் வன்மையாகக் கண்டிக்கிறது.

இனியாவது அரசு அடிப்படை சுகாதாரப் பணியாளர்களின் அடிப்படை ஊதியத்தை ரூ 210 என்றும் நிரந்தரப் பயணப்படி ரூ 45 வழங்க வேண்டும் என்றும் அவ்வறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## ஆட்குறைப்புத் திட்டத்தை எதிர்த்து உண்ணாவிரதம்

வேலூர், ஆக. 27—

வேலூர் மின்திட்டத்தில் திருவண்ணாமலை சிவில் மேற்பார்வை பிரிவில் பணிபுரியும் தினக்கூலித் தொழிலாளர்களில் 3 நபர்களை ஆட்குறைப்புச் செய்துள்ளனர். அந்தஆட்குறைப்பை எதிர்த்து வேலூர் திட்டமின் தொழிலாளர் சங்கம் தொடர் உண்ணாவிரதப் போராட்டத்தினை திருவண்ணாமலை சப் ஸ்டேஷனுக்கு முன்னால் ஆக. 28ந் தேதி காலையில் தோழர் டி. ஆர். புருஷோத்தமன் (பொதுச் செயலாளர்) தலைமையில் துவங்கப்பட்டது அதை ஆதரித்து திருவண்ணாமலை டவுன் ஸ்தாபன காங்கிரஸ் செயலாளர் திரு வேப்பு நாராயணன் பேசினர். தமிழ்நாடு ஊழியர் சங்க அமைப்புச் செயலாளர் தோழர் என் எஸ் விஸ்வநாதன் வாழ்த்துரை வழங்கினர் தோழர் சூரியநாராயணன் நன்றி கூறினர்.

தொடர் உண்ணாவிரதம் தொடங்கப்பட்டு நடந்து வருகிறது உண்ணாவிரத அறப் போராட்டத்தில் முதல்நாளான 25—8—72 அன்று தோழர்கள் பி. கே. கலியமூர்த்தி, கே. நடராஜன், சின்னத்தம்பி ஆகியோர் பங்கு பெற்றனர்.

26—8—72-ந் தேதி தோழர் என். எஸ் விஸ்வநாதன் ஊழியர் சங்க அமைப்புச் செயலாளர் தலைமையில் தோழர் பால சுப்பிரமணியன் (வலது கம்யூனிஸ்ட் கட்சி திருவண்ணாமலை நகர கமிட்டிச் செயலாளர்) 25—8—72 துவக்கிய உண்ணாவிரதத்தை முடித்து, இரண்டாவது நாளான 26—8—72-ந் தேதி உண்ணாவிரதப் போராட்டத்தைத் துவக்கி வைத்தார் தோழர்கள் எம் சுப்பிரமணியன், கே நடேசன், அ. இராமகிருஷ்ணன் ஆகியோர் உண்ணாவிரதப் போராட்டத்தில் கலந்து கொண்டனர். போராட்டம் தொடர்கிறது.

## ஆசிரியருக்கு...

### ஏழை விவசாயிகளுக்கு பட்டா வழங்கவேண்டும்

ஐயா,

வேடசந்தூர் தாலுகா ஆர். கோம்பை கிராமம் தொப்பியசாமி மலையின் வட பகுதியில் உள்ளது வெள்ளை கோட்டைசரகம். இதில் பரப்பளவு 1550ஏக் நிலம் உள்ளது. எங்கள் கிராமத்தில் ஏழை எளிய விவசாயிகள் அதிகம் உள்ளனர். 1880-ம் ஆண்டு சாமா நாயக்கர் என்ற மன்னர் ஆண்டு வந்தார். மேற்படி நிலத்தை பாரஸ்ட்இலாகாவில் சேர்த்து விட்டார்கள்

எங்கள் கிராமத்தில் உள்ள அரிசன மக்களுக்கு எவ்விதமான தொழிலும் இடையாது. பெரும் கஷ்டப்பட்டு வருகின்றார்கள். இது சம்பந்தமாக காட்டு இலாக்காவிற்கும், காட்டு இலாகா அமைச்சருக்கும் பல விண்ணப்பம் அனுப்பியும் நடவடிக்கை எடுக்கவில்லை. ஏழைகளின் சிரிப்பில் இறைவனை காணும் ஆட்சிபீடத் தலைவர்கள் உடனே நடவடிக்கை எடுத்து நிலம் இல்லாத ஏழைஎளியமக்களுக்கு பாரஸ்ட் இலாகாவில்சேர்த்துள்ள நிலத்தை பட்டா வழங்குமாறு தாழ்மையுடன் கேட்டுகொள்ளுகின்றேன்.

இப்படிக்கு,

பி. வெங்கடாசலம்,

ஆர். கோம்பை.

## மாணவர் சங்க கிளை அமைப்பு

கோவை, ஆக. —28

இந்திய மாணவர் சங்கத்தின் 1, 12 வார்டு கிளை அமைப்புக் கூட்டம் ஆக 20-ம் தேதியன்று காந்திபுரம் பொதுஜன சேவா சங்கத்தில் நடைபெற்றது.

அப்போது இந்திய மாணவர் சங்க நகரச் செயலாளர் தோழர் இராசேந்திரன் மற்றும் இந்திய மாணவர் சங்க மாநில செயற்குழு உறுப்பினர் தோழர் ஜி திருநாவுக்கரசு ஆகியோர் கலந்து கொண்டார்கள்.

### நிர்வாகிகள் தேர்வு

அமைப்புபற்றியும், மாணவர் சங்க கோரிக்கை பற்றியும் பேசினர்கள். கூட்டத்தில் 50 பேர் கலந்துகொண்டனர். பின்னர் கிளை நிர்வாகிகளுக்கான தேர்தல் நடைபெற்றது.

தலைவராக ஏ. செல்லத்துரையும், உபதலைவராக செல்வராசும், செயலாளராக வி சீனிவாசனும், துணைச் செயலாளராக நாராயணனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நிர்வாகக் குழு; செல்வராஜ், சண்முகம், சிக்கந்தர் பொன் பாண்டியன், முத்துக்குமார், பிரதாபன், சண்முக வடிவேல் ஆகியோர் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

## மே. வங்க சாலைப்போக்குவரத்துத் தொழிலாளர்கள் ஒருமைப்பாடுதினம்

திண்டுக்கல், ஆக. 29—

திண்டுக்கல் நகரில், மேற்கு வங்க சாலைபோக்குவரத்து தொழிலாளர்களின் ஒருமைப்பாடு தினம் ஆக. 27-ந்தேதி நடைபெற்றது

### ஊர்வலம்

அன்று மாலை 6 மணியளவில் திண்டுக்கல் பஸ் ஸ்டாண்டிலிருந்து மோட்டார்த் தொழிலாளர்களின் ஊர்வலம் புறப்பட்டு நகரத்தின் முக்கிய வீதிகள் வழியாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகம் வந்து சேர்ந்தது.

"மோட்டார்த் தொழிலாளர்களின்

ஒருமைப்பாடு தினம்—வாழ்க!

சம்பளக்குழு சிபாரிசை—அமுல்படுத்து!"

போன்ற கோஷங்கள் எழுப்பப்பட்டன. இறுதியில் மோட்டார் தொழிலாளர்களின் மேற்கு வங்க சாலை போக்குவரத்து தொழிலாளர் ஒருமைபாடு தினம் நடத்துவதின் அவசியத்தைப் பற்றியும், இன்றைய தொழிலாளர்களின் நிலை குறித்தும், தோழர் என் வரதராசன் பேசினர்

மதுரை மோட்டார் தொழிலாளர், சங்கத்தின் திண்டுக்கல் கிளைச் செயலாளர் தோழர் வி. எஸ் எம் மரைக்காயர் கீழ்காணும் தீர்மானத்தை வாசித்தார்.

### தீர்மானங்கள்

மேற்கு வங்கத்தில் போக்கு வரத்துகளை நாட்டுடமையாக்கும் போது அதில் பணியாற்றி வரும் தொழிலாளர்களையும் வேலைக்கு எடுத்துக் கொள்ளவேண்டுமென கேட்டுக் கொண்டது.

மத்திய சாலைப் போக்குவரத்து தொழிலாளர் சம்பளத் குழுவின் சிபாரிசை அமுல் படுத்தும்படி எல்லா மோட்டார் முதலாளிகளையும் கேட்டுக் கொண்டும் பலத்த கரகோஷத்திற்கிடையில் தீர்மானம் நிறைவேறியது.

# சி. ஐ. டி. யூ. சங்கங்களுக்கு மாநிலக் குழு சுற்றறிக்கை

**இந்திய தொழிற் சங்க மையத்தின் தமிழ் மாநிலக் குழுவின் சார்பில், உதவிச் செயலாளர் தோழர் ஏ. நல்ல சிவன் அனைத்து சி.ஐ.டி.யூ. சங்கங்களுக்கும் கீழ்வரும் சுற்றறிக்கையை ஆக. 26ந் தேதியன்று அனுப்பியுள்ளார்.**

**சுற்றறிக்கை வருமாறு:-**

தோழர்களே!

22—8—72ம் தேதியன்று நமது சி ஐ டி யூ மாநிலக் குழுவின் நிர்வாகிகள் கூட்டம் சென்னையில் நடந்தது.

அதில் தோழர் பி. ராமமூர்த்தியும் கலந்துகொண்டார். நமது இயக்கத்தை எதிர்நோக்கியுள்ள சில முக்கியமான பிரச்னைகள் குறித்து விவாதித்த பின் எடுக்கப்பட்ட முடிவுகளை கீழே தெரிவிக்கின்றேன்.

## 1) சிம்ஸன் தொழிலாளர் பிரச்னை

இப்பிரச்சினை ஏற்கனவே இருந்ததைவிட மிகச் சிக்கலாகியுள்ளது. ஏற்கனவே சஸ்பெண்ட் செய்யப்பட்ட 190 பேர் தவிர, சமீபத்தில் மேலும் 250 முக்கிய ஊழியர்களை, போலீஸ் கேஸ் இருக்கிறதென்ற ஒரே காரணத்திற்காக சஸ்பெண்ட் செய்துள்ளனர். முக்கிய ஊழியர்களை பழி வாங்கி தொழிலாளர்கள் விரும்பித் தேர்ந்தெடுத்த தலைமையை வெளியேற்ற தமிழக அரசும்— சிம்சன் நிர்வாகமும் கூட்டாக சதி செய்கின்றன. மத்திய அரசும் இதற்கு ஆசிகூறியுள்ளது.

இதை முறியடிக்க உதவுவது நமது வர்க்க கடமையாகும், எனவே செப்டம்பர் 4ம் தேதியை சிம்சன் தொழிலாளர் ஆதரவுதினமாக மாநிலம் முழுவதும்கொண்டாடுவது என முடிவு செய்யப்பட்டுள்ளது அன்று அரசு அலுவலகங்கள் முன்பு வெகுஜன உண்ணாவிரதப் போராட்டத்திற்கு ஏற்பாடு செய்யவும், மற்ற தொழிற் சங்கங்களையும் இப்போராட்டத்தில் கலந்துகொள்ளச் செய்வதற்கும் நம் சங்கங்கள் முயற்சி எடுக்க வேண்டும். ஒன்றுபட்ட நடவடிக்கைகள் சாத்தியம் இல்லாவிட்டாலும் சி ஐ டி யூ சங்கங்கள் தமது சொந்த பலத்தை அதிகபட்சம் திரட்டி உண்ணாவிரதத்தை நடத்தி ஆர்ப்பாட்டம் செய்ய வேண்டும். அன்று தமிழக முதல் மந்திரிக்கு பின் கண்ட தந்தியை ஒவ்வொரு சங்கத்திலிருந்தும் அனுப்பி வைக்க வேண்டும்

### தந்தி வாசகங்கள்

We Demand reinstatement of suspended Simpson workers and withdrawal of Criminal cases

அனைவரையும் வேலைக்கு அனுமதித்து பழி வாங்குதல் எதுவுமின்றி ஆலைகள் திறக்கப்பட வேண்டும் என்பது நமது பிரதானகோஷங்களாக இருக்க வேண்டும்.

## (2) விலைவாசி உயர்வு- வேலையில்லாமை எதிர்ப்பு தினம்

சமீபத்தில் ஏற்பட்டுள்ள விலைவாசி உயர்வும், பெருகிவரும் வேலையில்லாமையும் பொது மக்களின் எல்லா பகுதியினிடத்தும் ஆழமான அதிருப்தியை உண்டாக்கி வருகிறது. மத்திய மாநில அரசுகளின் முதலாளித்துவ வளர்ச்சிப் பாதையும் அதற்கான கொள்கைகளும் தான் இப்பிரச்சினைகள் முற்றுவதற்கான பிரதான காரணம் என்பதை முதலாளித்துவ அரசியல் கட்சிகளும், மற்ற தொழிற்சங்கங்களும் தொழிலாளரிடமிருந்து மறைக்கின்றன. எனவே அரசுகளின் இக்கொள்கைகளை முறியடிப்பதின் மூலமே இப்பிரச்னைகளுக்கு பரிகாரம் காண முடியும் என்பதை பொதுமக்களுக்கு விளக்கி, அவர்களை திரட்டுவதில் தொழிலாளி வர்க்கம் முன் நிற்க வேண்டும்.

இக்கிளர்ச்சியின் முதல் கட்டமாக தமிழ்நாடு முழுவதும் செப்டம்பர் 10-ந் தேதி ஊர்வலங்கள், ஆர்ப்பாட்டங்கள் நடத்தி பொதுக்கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யவும். இக்கிளர்ச்சியின் அடுத்த கட்டம் பற்றி சமீபத்தில் கூடவிருக்கும் மாநிலக் குழு முடிவு செய்யும். இந்தக் கிளர்ச்சியில் மற்ற தொழிற் சங்கங்களையும் பங்கு கொள்ள அழைப்பதோடு நமது சொந்த பலத்தை அதிகபட்சம் திரட்டி ஆர்ப்பாட்டம் நடத்த வேண்டும்.

## 3) கைத்தறி நெசவாளர் போராட்டம்

வழக்கத்திற்கு மாறாக இந்தஆண்டில் தீபாவளிக்கு முன்பே கைத்தறி அரங்கில் பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள துணிகள் தேங்கி நெருக்கடி மேலும் முற்றி வருகிறது. நூல் விலையும் உயர்ந்திருப்பதால் சொந்தத்தில் வேலை செய்யவும் வழியில்லை விலைவாசி ஒரு புறம் உயர்ந்துகொண்டிருக்கிறது. நெசவாளர்களின் துன்பம் சகிக்க முடியாததாகி வருகிறது. எங்கும் கண்டனக் குமுறல் கேட்கிறது. திட்டவட்டமாக கோரிக்கைகளின் அடிப்படையில் நெசவாளர்களை திரட்டி அரசாங்க கொள்கைகளுக்கு எதிராக நேரடி நடவடிக்கைகளில் இறங்குவது அவசர அவசியமான கடமையாகிறது

இதை நிறைவேற்றும் நோக்கத்துடன் மாநிலம் முழுவதிலும் இருந்து கைத்தறி நெசவாளர் சங்கங்களின் பிரதிநிதிகளை 11—9—72 அன்று மதுரையில் கூட்டுவதென முடிவு செய்யப்பட்டுள்ளது அக்கூட்டத்தில் தோழர் ஆர். உமாநாத்தும், வி கார்மேகமும் கலந்துகொள்வார்கள் உங்கள் பகுதிகளில் உள்ள கைத்தறி நெசவாளர் சங்கப்பிரதிநிதிகளை அக்கூட்டத்திற்கு அனுப்பி வைக்க விசேஷ முயற்சி எடுக்கவும்

## 4) தோல் பதனிடும் அரங்கம்

தோல்பதனிடும் அரங்கத்தில் சம்பளஉயர்வுகோரி வேலை நிறுத்தம் செய்வதென நம் சங்கங்களும் ஏ ஐ டி யூ சி சங்கங்களும் கூட்டாக முடிவு செய்துள்ளன.

25—8—72 தேதியன்று வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுப்பதென முடிவு. சென்னை— செங்கற்பட்டு— வடஆற்காடு — சேலம் — கோவை—திருச்சி—மதுரை ஆகிய மாவட்டங்களில் நடைபெறவிருக்கும் இப்போராட்டத்திற்குபோதிய தயாரிப்புகள் செய்வதுடன் சகோதர ஆதரவு கொடுக்க முன்வாருங்கள்,

## 5) சிமென்ட் தொழிலாளர் அரங்கம்

இப்பொழுது நாடு முழுவதும் நடந்துவரும் சிமெண்ட் தொழிலாளர் பொது வேலை நிறுத்தத்தில் தமிழகத்திலுள்ள7 ஆலைகள் —குவாரிகளிலும் உள்ள அனைத்து தொழிலாளர்களும் பங்குகொண்டுள்ளனர். வேலைநிறுத்தம் நீடிப்பதால் அதை உடைக்க ஆலை காங்கு நிர்வாகங்கள் போலீஸ் உதவியுடன் பல முயற்சிகளைச் செய்கின்றனர். இதை எதிர்த்து வேலை நிறுத்தத்தையும் தொழிலாளரின் ஒற்றுமையையும் பாதுகாப்பதில் நம் சங்கங்கள் முன் நிற்கவேண்டும். அகில இந்திய பேச்சுவார்த்தைக் கமிட்டியில் சி. ஐ. டி. யூ. வின் மாநில தலைவர் தோழர் கே ரமணி இடம் பெற்றுள்ளார் அப்போதைக்கப்போது தீக்கதிரில் வரும் செய்திகளையும் விபரங்களையும் பயன்படுத்தி தொழிலாளரின் போராட்ட உணர்வை பாதுகாக்கவும்.

## (6) தோட்ட தொழிலாளர் அரங்கம்

வால்பாறை தோட்டத் தொழிலாளர்களின் போராட்டத்தின் போது, கேரளத்தில் கிடைக்கும் சம்பள உயர்வை தமிழகத்திலும் கிடைக்கச் செய்வதாக தமிழக முதலமைச்சர் வாக்குறுதி அளித்தார். அந்தஅடிப்படையில் வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்பட்டது அதன் பின்னர் கேரளத்தில் சம்பள உயர்வு கிடைத்துள்ளது. தமிழகத்தில் அந்த உயர்வைத் தர தோட்ட முதலாளிகள் மறுக்கின்றனர். எனவே— கிளர்ச்சியும், போராட்டமும் அவசியமாகின்றன.

எனவேசெப்டம்பர்மாதம் முழுவதிலும் தமிழகத் தேயிலை, ரப்பர் தோட்டங்களில் கிளர்ச்சி பிரச்சாரத்தை நடத்தி அக்டோபர் மாத ஆரம்பத்தில் வேலை நிறுத்தத்தைத் துவக்க தயாராகுங்கள்.

## 7) போனஸ்

சென்ற வருடமே குறைந்தபட்ச போனஸ் 8⅓ சதவிகிதம் கிடைக்க வேண்டுமென்று பல தொழில்களிலும் பெரும் கிளர்ச்சிகளும், போராட்டங்களும் நடந்தன. சில தொழில்களில் தொழிலாளர் வெற்றியும் பெற்றனர். இந்தக் கோரிக்கை தொழிலாளர்களை எந்த அளவுக்கு ஆகர்ஷிக்கிறது என்பதற்கு சமீபத்தில் பம்பாயில் நடைபெற்ற 90 ஆயிரம் தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் சான்றாகும். இப்பிரச்சினையில் நம் சங்கங்கள் உடனடியாக கிளர்ச்சிப் பிரச்சாரத்தில் இறங்கி சகல தொழிலாளர்களையும் ஓரணியில் திரட்ட தீவிர முயற்சி செய்யவேண்டும்.

## ஒர்க்கிங் கிளாஸ்

மேற்படி பெயரில் சி ஐ டி யூ. மத்திய அலுவலகம் ஒரு மாதாந்திர பத்திரிகையை வெளியிட்டு வருவது உங்களுக்குத் தெரியும். அது துவக்கப்பட்டு ஒரு வருடமாகிறது. தொழிற் சங்க இயக்க அனுபவங்கள் பற்றிய பல முக்கிய கட்டுரைகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. தொழிற்சங்க ஊழியர்களுக்கு அது மிகவும் பயன்படும். ஒவ்வொரு சங்கமும் குறைந்தபட்சம் ஒரு பிரதிக்கு வருடச் சந்தா கட்டி விட வேண்டும்.

இதுபற்றி தோழர் பி. டி. ரணதிவே சமீபத்தில் அனுப்பிய சர்குலரை தீக்கதிரிலும் பார்த்திருக்கலாம். ஒரு ஆண்டு சந்தா ரூபாய் ரூ, 5 ஆகும் முடிந்தால் ஒரு ஏஜென்சி எடுத்து அந்தப்பத்திரிகையை பரவலாக விற்பனை செய்ய முயற்சிக்கவும்.

## 9) சி ஐ டி யூ இணைப்பு கட்டண சம்பந்தமாக

சி ஐ டி யூ மத்திய அலுவலகத்திற்கு 1971-ம் வருட "பாரத்தையும்" இந்த வருடத்திற்கான சந்தாவையும் இதுவரை அனுப்பாத சங்கங்கள் உடனே அனுப்பிவைக்க வேண்டும்,

சி ஐ டி யூ தமிழ் மாநிலக் குழுவின் அடுத்த கூட்டம் செப்டம்பர் மாதத்தில் 14 முதல் 17 வரை கன்னியாகுமரி மாவட்டத்தில் நடைபெறும் மற்ற விபரங்கள் பின்னர் அறிவிக்கப்படும்,

★

விவசாயிகளின் 5 அம்சக் கோரிக்கைகளுக்காக திருப்பரங்குன்றத்தில் மறியல் செய்ய மின் கட்டண வசூல் அலுவலகம் நோக்கி ஊர்வலம் செல்கிறது.

மறியல் செய்யவந்த தோழர்களை இடைவழியிலேயே மறித்து கைது செய்ய போலீசார் எத்தனித்தனர். கைதாவதற்கு மறுத்து, நடுரோட்டில் அமர்ந்து சத்தியாக்கிரகம் செய்கின்றனர் தோழர்கள்.

★

# முதலமைச்சர் வாக்குறுதி மீறலைக் கண்டித்து மாவட்ட தலைநகரங்களில் பட்டதாரி ஆசிரியர் ஆர்ப்பாட்டம்

**மதுரை, ஆக. 27—**

**தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக மாவட்ட தலைநகரங்களில் ஆர்ப்பாட்டம் நடத்துவது என்றும், பின்னர் போராட்டத்தில் இறங்குவது என்றும் பட்டதாரி ஆசிரியர் கழகம் முடிவு செய்துள்ளது.**

மதுரை, ஆக. 28—

தமிழ்நாடு பட்டதாரி ஆசிரியர் கழக செயற்குழு மாநிலத் தலைவர் திரு பி. என். பழனிச்சாமி தலைமையில் ஆகஸ்ட் 23ம் நாள் நடைபெற்றது அதுசமயம் விவாதித்து எடுக்கப்பட்ட முடிவுகள் வருமாறு —

### செப் 5ல் கண்டன ஊர்வலம்

அ) தமிழக முதலமைச்சர் மார்ச் 7ம்தேதி சட்டமன்ற மேலவையிலும், பட்டதாரி, ஆசிரியர் கழக பிரதிநிதிகளிடம் நடத்திய பேச்சுவார்த்தையின் போதும் கொடுத்த உறுதி மொழியைக் காப்பாற்றவில்லை எனவே இப்பொழுது அறிவித்துள்ள புதிய ஊதிய விகிதத்தை கண்டித்து செப் 5ம்தேதி கண்டன ஊர்வலமும் சர்வகட்சி தலைவர்களை அழைத்து மாவட்ட தலைநகர்களில் கண்டனக் கூட்டங்களும் நடைபெறும்.

ஆ) மாநிலக் கண்டன மாநாடு செப் 15ம்தேதி சர்வ கட்சியினரை அழைத்து சென்னையில் ஊர்வலத்துடன் நடத்தி போராட்டத்தை அறிவித்தல்.

### கோரிக்கைகள்

இ) அரசிற்கு செப். 14ம் தேதிவரை முதலமைச்சர் அளித்த உறுதிமொழியினை நிறைவேற்ற அவகாசம் அளித்தல்.

1) சாதாரண பட்டதாரி ஆசிரியர்களின் ஊதியத்தை ரூ. 375க்கு உயர்த்தவேண்டும்,

2) தேர்வுநிலைப் பட்டதாரி ஆசிரியர்களின் ஊதியத்தை ரூபாய் 450க்கு உயர்த்தி ஐந்து ஆண்டுப் பணிகால முடிவில் தேர்வு நிலை வழங்க வேண்டும்.

### பணிப் பதுகாப்பு சட்டம்

3) 1972-ம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதிக்குப்பின் பணியில் சேர்ந்த பட்டதாரி ஆசிரியர்கள் அனைவரையும்பணி செடாது, அவர்கள் பணியில் சேர்ந்த காலத்திலிருந்தே அவர்கள் பணியினை வரை முறைப் படுத்தல்.

4) தமிழ்நாடு கல்வித் துறையிலுள்ள ஏ,பி பிரிவுகள் முனிசிபல், மாநகரவை பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்களை அந்தந்த கேடரில் பணிதுவங்கிய காலத்தைக் கணக்கில் கொண்டு ஒன்றாக இணைத்தல்.

5) தனியார் பள்ளி ஆசிரியர்களுக்கு பணிப் பாதுகாப்பு சட்டம் இயற்றல்.

6) அனைத்துப் பிரிவுகளிலுமுள்ள முதுகலைப் பட்டதாரி ஆசிரியர்களையும் கல்லூரியில் ஏ. பிரிவிருந்து சேர்த்துக் கொள்வது போல் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

7) பட்டதாரி பயிற்சி ஆசிரியர்களின் பணியினை வரைமுறை படுத்தல்வேண்டும்.

இக்கோரிக்கைகளுக்காக இயக்கங்கள் நடத்துவது என்று முடிவு செய்யப்பட்டது.

குமாரபாளையம்

# ஸ்ரீ ஆண்டாள் கம்பெனித் தொழிலாளர்களின் போராட்டம் வெற்றி

குமாரபாளையம், ஆக. 27—

கடந்த ஜூலை 13ம் தேதி ஆண்டாள் கம்பெனி நிர்வாகத்தால் 31 தொழிலாளர்கள் டிஸ்மிஸ்செய்யப்பட்டனர். அவர்களுக்கு மீண்டும் வேலை கொடுக்கக்கோரி கம்பெனியின்கேட் முன்னர் 20—7—72ந்தேதி முதல் 15—8—73வரை சத்யாக்கிரக போராட்டம் நடைபெற்றது.

லேபர் ஆபீசரின் ஆலோசனையை மேனேஜ்மெண்டார் புறக்கணித்ததோடு யாரையும் வேலைக்குஎடுக்க முடியாது என நிர்வாகம் மறுத்தது. எனவே 15-8-72 முதல் 22-8-72வரைதொழிலாளர்கள் தினசரி இருவர் வீதம் தொடர் உண்ணாவிரதம் இருந்தனர். இதற்கிடையில் கம்பெனியின் மற்ற செக்ஷன் தொழிலாளர்கள் வேலைநீக்கம் செய்யப்பட்ட 31 தொழிலாளர்களுக்காக 18-8-72 அன்று ஒருநாள் அடையாளவேலை நிறுத்தம் செய்து அவர்களை மீண்டும் வேலைக்கு எடுக்கக் கோரினர். நிர்வாகம் மீண்டும்அவர்களது கோரிக்கையைப் புறக்கணித்தது.

எனவே பழி வாங்கப்பட்ட அனைவரையும் வேலைக்கு எடுக்கக்கோரி மற்ற செக்ஷன் தொழிலாளர்கள் 21—8—72 முதல் தொடர்ந்த வேலைநிறுத்தம் நடத்தினர். 22-8-72 முதல் தோழர் பழனிச்சாமி பிரச்சனை முடியும்வரை உண்ணாவிரதமும் தொடங்கினர். ஸ்டிரைக்கின் 4வது நாளும் உண்ணாவிரதத்தின் 3வது நாளும ஆன 24—8—72 வியாழக்கிழமை குமாரபாளையம் சர்வகட்சி பிரதிநிதிகளுக்கும், நிர்வாகத்திற்கும் நடைபெற்ற பேச்சுவார்த்தையில் உடன்பாடு ஏற்பட்டது.

### உடன்பாடு

எல்லா தொழிலாளர்களையும் 28—8—72 முதல் 1—9—72 வரை நிர்வாகம் வேலைக்கு எடுத்து கொள்ள வேண்டும்.

வேலையிழந்த நாட்களுக்கு ரூ 320 மட்டும் தொழிலாளர்களுக்கு கொடுக்கப்படும். (கொடுத்து விட்டார்)

இது சம்மந்தமாக பின்னர் நிர்வாகம் பழிவாங்கும் போக்கில் நடக்கக் கூடாது.

உடன்பாடு ஏற்பட்டதால் உடனே உண்ணாவிரத போராட்டத்தை நிறுத்துவது என முடிவு செய்யப்பட்டது.

தோழர் பழனிச்சாமியின் உண்ணாவிரதத்தை நகர இந்திரா காங்கிரஸ் பிரதிநிதி திரு எல் கே. ஜி. கிருஷ்ணசாமி செட்டியார் பழரசம் கொடுத்து முடித்து வைத்தார் பின்னர் தொழிலாளர்களுக்கு விளக்க கூட்டம் நடந்தது.

# புரசை சிட்டிஜெம் தொழிலாளர் போராட்டம்

சென்னை, ஆக. 22—

சென்னை புரசைவாக்கம் நெடுஞ்சாலையில் உள்ள ஹோட்டல் சிட்டி ஜெம் நிர்வாகம் தொழிலாளர்களை கடுமையாக சுரண்டி வந்தது. தொழிலாளர்களின் வேலை நேரமோ 12 மணி நேரம். சில நேரங்களில் யாராவது விடுப்பு எடுத்திருந்தால் ஒரு தொழிலாளி 24 மணி நேரமும் வேலைசெய்ய வேண்டிய நிர்பந்தமான நிலை ஏற்படும். அப்படியிருந்தும்கூட சம்பளமோ 2 ரூபாய் அல்லது 3 ரூபாய் தான்.

இந்த நிலையில் தொழிலாளர்கள் சி. ஐ. டி யூ. சங்கத்தில் சேர்ந்து உறுதியாக போராட ஆயத்தமாயினர். இதை அறிந்த முதலாளி தொழிற்சங்க வேலைகளில் முன்னணியில் இருந்த 2 தொழிலாளர்களை திடீரென்று வேலை நீக்கம் செய்தார். இதை எதிர்த்து ஆகஸ்ட் 26ம் தேதி முதல் உறுதியுடனும் ஒற்றுமையுடனும் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

இந்த ஓட்டலுக்கு அருகாமையில் தான் சட்டக்கல்லூரி மாணவர்களின் ஹாஸ்டல் உள்ளது, அங்கு உள்ள இந்திய மாணவர்சங்கத்தை சேர்ந்த மாணவத்தோழர்கள் சகலவிதமான உதவிகளையும் தொழிலாளர்களுக்கு செய்துவருகின்றனர்.

தொழிலாளர்கள் உறுதியாகப்போராடி வருகின்றனர்.

# பாண்டியன் ஆட்டோசர்வீசின் பழிவாங்கும் போக்கு

மதுரை, ஆக. 26—

மதுரை மோட்டார் தொழிலாளர் சங்கத்தில் சேர்ந்ததற்காகபாண்டியன் ஆட்டோ சர்வீஸ்நிர்வாகம் பழிவாங்கும் நடவடிக்கையில் இறங்கியுள்ளது. கேசவன் என்ற தொழிலாளி நிர்வாகிகளைத்திட்டியதாக பொய்க் குற்றம் சாட்டப்பட்டு வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளார். ஆனால்குறிப்பிட்ட தேதியில் அவர் லீவு எடுத்துக்கொண்டு வேலைக்கே வராமலிருக்கிறார்.

மகாலிங்கம் என்ற தொழிலாளியை தெரியாத வேலையைச் செய்யுமாறு நிர்வாகம் நிர்ப்பந்தித்துள்ளது.

மற்றும் கருப்பையா, ரத்தினம் ஆகிய இருவரும் திருநெல்வேலியிலுள்ள வேறொரு ஸ்தாபனத்துக்கு மாற்றப்பட்டனர், டர்னர் அந்தோணிசாமி ஆட்குறைப்பு செய்யப்பட்டார்.

இந்தப் பழி வாங்குதலை எதிர்த்து அண்மையில் கம்பெனி முன் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

அதைத் தொடர்ந்து அண்மையில்நடந்த தொழிலாளர்களின் கூட்டத்தைக் கலைப்பதற்கு அடியாட்கள் ஏவிவிடப்பட்டனர்.

கூட்டத்தினர் கட்டுப்பாடாய் இருந்து அடியாட்களை விரட்டியடித்தனர்.

# இந்தியாவில் மாநில வாரியாக படிக்காதவர்கள் விகிதம்

நாடு சுதந்திரம் பெற்று 25 ஆண்டுகள் ஆன பின்னும் 38 கோடி மக்கள் படிக்காதவர்களாக உள்ளனர். நாட்டில் எழுத்தறிவில்லாதவர்கள் எண்ணிக்கை மாநில வாரியாகக் கீழே தரப்படுகிறது.

கீழேயுள்ள புள்ளி விவரங்கள் மொத்த ஆண்களில் படிக்காதவர்களின் சதமானத்தையும் மொத்தப் பெண்களில் படிக்காதவர்களின் சதமானத்தையும் குறிக்கும்.

| | ஆண் | பெண் |
|---|---|---|
| இந்தியா முழுமையும் ... | 60·49 | 81·56 |
| கேரளா ... | 33·46 | 46·60 |
| தமிழ்நாடு ... | 48·32 | 73·17 |
| புதுச்சேரி ... | 45·44 | 61·76 |
| மகாராஷ்டிரம் ... | 48·70 | 74·03 |
| ஆந்திரா ... | 66·73 | 84·35 |
| அஸ்ஸாம் ... | 62·32 | 81·14 |
| பீகார் ... | 69·40 | 91·51 |
| குஜராத் ... | 53·83 | 75·44 |
| ஹரியானா ... | 62·80 | 85·32 |
| ஹிமாசலம் ... | 57·70 | 79·96 |
| காஷ்மீர் ... | 73·59 | 90·90 |
| ம. பி. ... | 67·24 | 89·16 |
| மணிபுரி ... | 53·84 | 80·78 |
| மேகாலயா ... | 66·16 | 75·70 |
| மைசூர் ... | 58.13 | 79·24 |
| நாகாலாந்து ... | 65·58 | 80·79 |
| ஒரிஸ்ஸா ... | 61·65 | 86.25 |
| பஞ்சாப் ... | 59.94 | 74.25 |
| ராஜஸ்தான் ... | 71.58 | 91.74 |
| திரிபுரா ... | 59.44 | 79.45 |
| உ. பி. ... | 68.24 | 89.82 |
| மே. வங்கம் ... | 57.16 | 77.92 |

# மெட்டல்பாக்ஸ்கம்பெனி பகாசூரக் கொள்ளை

மெட்டல் பாக்ஸ் ஒரு சாதாரண தகர டப்பாக் கம்பெனி என்று யாரும் நினைத்து விடக்கூடாது. 250 கோடி ரூபாய் மூலதனத்துடன் இங்கிலாந்திலிருந்து செயல்படும் இந்த அகில உலக ஏகபோகம் இந்தியாவில் மட்டுமல்ல பாகிஸ்தான், மலேசியா, தாய்லாந்து, கீன்யா, ஜமாய்கா, டிரினிடாட், தான்சானியா, நிற வெறி ஆட்சி தென் ஆப்பிரிக்கா, இத்தாலி மற்றும் பல ஆசிய ஆப்பிரிக்க நாடுகளில் கிளைக் கம்பெனிகள் வைத்து லாப வேட்டை நடத்தி வருகிறது பல வருஷங்களாக.

ஒரு ஆங்கிலக் கம்பெனி இவ்வளவு பின் தங்கிய நாடுகளில் மூலதனம் இட்டு தொழில் நடத்த வேண்டிய காரணம் என்ன? அங்கே இருக்கும் மக்களுக்கெல்லாம் வேலை கொடுக்க வேண்டும் அந்த நாடுகளில் தொழில் அபிவிருத்தி செய்ய வேண்டும் என்ற பரந்த எண்ணமா? அல்லது லாப நஷ்டக் கணக்குப் போட்டு அரசியல் சூழ்நிலை சரியாக இருக்கிறதா என்று பார்த்து அங்கிருக்கும் மக்களின் உழைப்புச் செல்வத்தை சுரண்ட வேண்டும் என்ற சுயநல நோக்கமா? இந்தியாவில் இந்தக் கம்பெனி வளர்ந்துள்ள வரலாற்றைப் பார்த்தாலே நமக்கு விடை தெரிந்துபோய் விடும்.

## வெள்ளையன் கொள்ளை வெட்ட வெளிச்சம்

40 ஆண்டுகளுக்கு முன்னால் தனிக் கம்பெனியாக கல்கத்தாவில் தொடங்கிய மெட்டல் பாக்ஸ் மிகுந்த வளர்ச்சியடைந்துவிட்ட காரணத்தினால், 1949ல் பொதுக் கம்பெனியாக பங்கு மார்க்கெட்டில் இந்தக் கம்பெனியின் பங்குகளை விற்க—வாங்கக் கூடிய கம்பெனியாக மாற்றப் பட்டது. அப்படி மாறியபோது இந்தக் கம்பெனியின் மொத்த மூலதனம் ரூ. 100 லட்சத்துக்கும் குறைவு. இப்போதோ அதன் மூலதனம் ரூ. 1000 லட்சம் அப்போது ஆண்டுக்கு மொத்த விற்பனை ரூ 300 லட்சத்திற்கும் குறைவு. இப்போது விற்பனை ரூ 3600 லட்சம் கம்பெனி இவ்வளவு வளர்ந்திருக்கும்போது அதில் முதலீடு செய்தவர்கள் வளராமல் இருப்பார்களா என்ன?

1949ல் கம்பெனியின் பங்கு மூலதனம் ரூ 80 லட்சமாக இருந்தது இப்போது ரூ 664 லட்சத்திற்கு வளர்ந்திருக்கிறது. இந்தத் தொகையில் ரூ 400 லட்சம் மட்டும் தான், பங்குதாரர்கள் தாங்களாகவே அவ்வப்போது கம்பெனியில் மூலதனமாகப் போட்டபணம். மீதி ரூ 260 லட்சம் அவர்களுக்குக் கம்பெனியிலிருந்து இலவசமாகக் கிடைத்த போனஸ் பங்கு (கம்பெனியின் லாபம் அதிகமாகி நிறைய சேமிப்பு சேர்ந்துவிட்டால் இந்த சேமிப்பை எடுத்து இலவசப் பங்குகளாக பங்கு தாரர்களுக்கு விநியோகிப்பது எப்போதுமே முதலாளித்துவக் கம்பெனிகளுக்கு வழக்கம்.

இதுவல்லாமல் போனஸ் பங்குகள் உள்பட எல்லாப் பங்குகளுக்கும் வருடாவருடம் லாபப்பங்கீடாக கிடைக்கும் டிவிடெண்ட் என்ற வகையறுப்படி இந்த 22 வருடங்களில் பங்குதாரர்களுக்கு கொடுக்கப்பட்ட பணம் ரூ 800 லட்சம் இவ்வளவு கொடுத்தும் கம்பெனிக்குள்ளேயே ரிசர்வ் என்று சொல்லப்படும் சேமிப்பு (பங்கு தாரர்களுக்குச் சொந்தமானது) முன்னைக்கு இப்போது ரூ 320 லட்சம் உயர்ந்திருக்கிறது.

ஆகமொத்தத்தையும் கூட்டிப்பார்த்தால் 22 வருடங்களுக்கு முன் 80 லட்ச ரூபாய் மூலதனத்துடன் ஆரம்பித்து இடையிலே கொஞ்சம் சேர்த்து மொத்தம் ரூ 400 லட்சம் முதலீடு செய்த பங்குதாரர்களுக்கு (இதில் பாதி 1966ல் தான் முதலீடு செய்யப்பட்டது) போட்ட முதலுக்குமேல் இதுவரை கிடைத்திருக்கக் கூடிய மொத்த ஆதாயம் ரூ 1300 லட்சம், அதாவது மூன்று மடங்குக்கும் மேல்.

## கொள்ளையனுக்கு துணை யார்?

இவ்வளவு கொள்ளை என்று கேட்டால் சொல்லுவார்கள் நாங்கள் துணிந்து மூலதனத்தைப் பணயம் வைத்தோம்—அதற்கான பரிசு ஆதாயப்பணம் என்று இது என்ன லாட்டரிச்சீட்டில், கிண்டி ரேசில் வைக்கும் பணயம் போலவா வந்தாலும் வரும் போனாலும் போகும் என்பதற்கு? காலனி ஆதிக்கத்தில் இருந்த நாட்டில் ஏகபோக உரிமையுடன் வேண்டிய விலைக்கு விற்கக்கூடிய மார்க்கெட்டில் முதலீடு செய்ய என்ன பெரிய துணிவு வேண்டிக் கிடந்தது?

இன்று கூட ஏகபோகத் தொழில்களை தேச உடைமையாக்க மாட்டோம் டிவிடெண்ட பணத்தை தாராளமாக வெளிநாட்டிற்கு எடுத்துச் செல்லலாம் என்று உத்திரவாதம் கொடுக்கும் காங்கிரஸ் அரசாங்கம் இருக்கும் வரையில் உற்பத்தியாகும் பொருளுக்கு மார்க்கெட்டில் நல்ல கிராக்கி இருக்கும் வரையில், போட்ட முதலுக்கு என்ன ஆபத்து காத்திருக்கிறது?

அடித்த கொள்ளைக்கு ஆத்ம சாந்தி தேடித்தர துணிவுப் பணம் என்று சொல்லித் திரிவது எப்போதுமே முதலாளித்துவத்துக்கு பல்செய்துவரும் எத்துவேலை, ஆனால் உடலையும், உயிரையும் துணிந்து பணயமவைத்து தொழிற்சாலையில் உண்மையான செல்வத்தை- உற்பத்தியை உண்டாக்கும் தொழிலாளி மட்டும் என் துணிவுக்கு என்ன பரிசு என்று கேட்டு விடக்கூடாது, இந்த முதலாளித்துவ சமுதாயத்தில்.

இப்படி துணிந்து கொழுக்கும் மெட்டல் பாக்ஸ் பங்குதாரர்கள் தான் யார்? மொத்தம் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட பங்குதாரர்களுக்குச் சொந்தம் மெட்டல் பாக்ஸ், இந்தியா-என்று மக்கள் கண்ணில் மண்ணை தூவப் பார்க்கலாம் நிர்வாகம் ஆனால் இந்தக் கம்பெனியின் பங்குகளில் 100க்கு 60 இந்த மூவாயிரம் பேரில் ஒருவருக்கே சொந்தமானது என்ற கசப்பான உண்மையை அவர்கள் பறைசாற்றிக் கொள்ள என்றுமே விரும்புவதில்லை. யார் அந்த ஒருவர்! இந்தியாவின் எந்த ஊரில் இருக்கிறார்? சுதந்திர இந்தியாவின் எந்தப் பகுதியில் தேடிப் பார்த்தாலும் கிடைக்காத இந்த பங்குதாரர்தான் ஆறாயிரம் மைலுக்கப்பால் இங்கிலாந்தில் இருக்கும் மெட்டல் பாக்ஸ் தலைமைக் கம்பெனி.

## சுரண்டுவது பலவிதம்

டிவிடெண்ட், போனஸ் பங்கு, சேமிப்பு ஆகிய வழிகளால் சென்ற 22 ஆண்டுகளில் ரூ 800 லட்சம் லாபமடைந்த இந்த அந்நியக் கம்பெனிக்கு மேலும் சில வழிகளிலும் இந்தியப் பணம் பரிசாக அனுப்பப்படுகிறது. அதில் ஒருவழி, தொழில் நுணுக்க ஆலோசகர் பதவி இந்திய மெட்டல் பாக்ஸ் கம்பெனிக்கு ஆங்கில ஆலோசகர் என்று ஒரு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டு இதற்காக வருடா வருடம் ஒரு கட்டணத் தொகை ஆங்கிலக் கம்பெனிக்கு அளிக்கப்பட்டு வருகிறது.

ஆங்கிலக் கம்பெனிக்கு இந்த ஆலோசகர் பதவி எத்தனை நாள் என்று தீர்மானம் செய்வது யார்தெரியுமா? தொழில் நுணுக்க ஆலோசனை பெறும் இந்தியக் கம்பெனி அல்ல ஆலோசனை அளிக்கும் ஆங்கிலக் கம்பெனிதான் தான்விரும்பும் நாள்வரை ஆலோசகராக இருந்து கட்டணம் வசூலித்துச் செல்லலாம் என்று சொல்கிறது, இந்த ஒப்பந்தம். இந்த விசித்திர ஒப்பந்தத்துக்கு இந்திய மெட்டல் பாக்ஸ் எப்படி சம்மதித்தது என்று சிலருக்கு ஆச்சரியமாக இருக்கலாம். பெரும்பான்மை பங்கு வைத்திருக்கும் அந்த ஆங்கிலக் கம்பெனியின் கைப்பாவைதான் இந்தியக் கம்பெனி என்ற விவரம் அவர்களுக்குப் புரியும்வரை.

## சுரண்டலுக்கு முக்காடு

நடைமுறையில் ஆங்கிலக் கம்பெனியின் சொல்படியே இந்தியக் கம்பெனி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் பல வருடங்களாக இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட வெள்ளைக்காரர்களே மேனேஜிங் டைரக்டராகவும், மற்றடைரக்டர்களாகவும், அதிகாரிகளாகவும் பதவிக்கு வைக்கப்பட்டிருந்தனர் ஆனால் ஒரு இந்தியக் கம்பெனியின் உச்சியில் வெள்ளைத்துரை உட்கார்ந்திருந்தால் வெளிநாட்டு ஆதிக்கம் பச்சையாகத் தெரிந்துபோய் விடுகிறதே என்பதால் இப்போதெல்லாம் அதிக விசுவாசமுள்ள இந்தியர்களையே டைரக்டர்களாக நியமிக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருக்கிறது இந்தக் கம்பெனி.

இந்த பழுப்புத்துரைமார்களின் விசுவாசத்திற்காக அவர்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம் கொஞ்சநஞ்சமல்ல. போன வருடத்தில் மட்டும் ஐந்து இந்திய முழுநேர டைரக்டர்களுக்கு அளிக்கப்பட்ட தொகை—சம்பளமாக மொத்தம் ரூ 5,75,000; வைப்புநிதி, இன்சூரன்சு ஆகிய வகையில் ரூ 1,25,000 மற்ற சலுகைகள் வகையில் ரூ. 2,30,000 ஆக மொத்தம் ரூ 9,30,000; அல்லது ஒவ்வொரு டைரக்டருக்கும் மாதம் ரூ 15,000. ஆனால் இதே பதவிகளில் அமர்ந்திருந்த வெள்ளைக்காரர்களுக்கு இதைப்போல இரண்டு மடங்கு சம்பளமும் சலுகையும் கொடுத்திருக்கிறது. மெட்டல் பாக்ஸ் கம்பெனி. இந்த இனப்பாகுபாடு, வெள்ளி விழா கொண்டாடும் சுதந்திர இந்தியாவில் இன்றைக்கும் பலஇடங்களில் நடைமுறையில் இருப்பதைப் பார்க்கலாம்.

இந்த 'மற்ற சலுகைகள்' எல்லாம் என்ன தெரியுமா? இருக்க இலவச மாளிகை; வீட்டிலுள்ள கட்டில், மேஜை, கட்டு முட்டு சாமான்கள், குளிர்சாதனப்பெட்டிகள் எல்லாம் இலவசம்; உபயோகப்படுத்தும் மின்சாரம், கார் இலவசம், வேலையாட்கள் இலவசம், குடும்பம் முழுவதுக்கும் உயர்தர வைத்தியவசதி இலவசம், ஆண்டு விடுமுறையில் குடும்பத்துடன் எங்கு வேண்டுமானாலும் போய்வர உயர் வகுப்பு போக்குவரத்துக் கட்டணம் இலவசம், அப்படியானால் வாங்கும் சம்பளத்தை எப்படித்தான் செலவழிப்பது என்று ஆச்சரியப்படுகிறீர்களா? இந்த 'சோசலிச' நாட்டில்தான் பணக்காரர்களின் ஆடம்பரச் செலவுகளுக்கும் உல்லாச கேளிக்கைகளுக்கு கோபுரம் போல் சொத்து சேர்த்துக் குவிப்பதற்கும் எந்தவிதமான உச்சவரம்பும் இல்லையே!

## அயராத உழைப்பு உயராத கூலி

ஆனால் ஒரு விஷயத்தில் மட்டும் மிக உறுதியான வரம்பு உண்டு மெட்டல் பாக்ஸிலே. அதுதான் தொழிலாளிக்கு கொடுக்கப்படும் சம்பளமும் போனசும் அப்படிப்பட்ட வரம்புக்குள் வைத்து குறைந்த சம்பளம் கொடுத்தால் தான் மெட்டல் பாக்ஸின் நிகர லாபம் பெருக முடியும். பெரிய ஆபீசர்களுக்கு கொட்டிக்கொடுக்க முடியும். ஆங்கிலக் கம்பெனிக்கு அள்ளிப்போக முடியும் போட்ட மூலதனம் பலமுறை குட்டிபோட்டுச் சேரமுடியும்.

5 டைரக்டர்களுக்கு ஏறக்குறைய 10 லட்சம் ரூபாயும் 200 அதிகாரிகளுக்கு மாதம் 2000 ரூபாய்க்கு மேல் சம்பளமும் அள்ளித்தரும் அநியாயக் கொள்ளையை 10,000 தொழிலாளர் இருந்தும் தட்டிக்கேட்க முடியாது இந்த நாட்டிலே எங்கோ உட்கார்ந்து கொண்டிருப்பவர்களுக்கு, 'துணிந்து' பணம் போட்டார்கள் என்ற பொய்யைச்சொல்லி கோடிக்கணக்கில் கொட்டிக் கொடுப்பதற்குப் பதிலாக, தினம் தினம் உயிரையும் உடலையும் பணயம் வைத்து இயந்திரங்களோடு இயந்திரமாகப் போராடி உற்பத்தியைப் பெருக்கும் எங்களுக்குக் கொஞ்சம் அதில் பங்கு கொடுங்கள் என்று தொழிலாளிகள் கேட்டுவிட முடியாது. ஏனென்றால் முதலாளித்துவத்தின் அமைப்பே அப்படி.

டெல்லியிலே லாக்அவுட், கல்கத்தாவிலே தொழிற்சாலை மூடுதல். சென்னையிலே ஸ்ட்ரைக்கை அடக்குதல் இவ்வாறு பல வழிகள் மூலம் தொழிலாளர் போராட்டங்களை நசுக்கியே வளர்ந்து வந்திருக்கிறது மெட்டல் பாக்ஸ் கம்பெனி 1967ல் மேற்குவங்கத்தில் தொழிலாளர்களுக்கு ஆதரவான ஐக்கிய முன்னணி பதவியேற்றபோது பேய், பிசாசு என்று அலறியவர்களில் மெட்டல் பாக்ஸ் சேர்மனும் ஒருவர்.

கம்பெனி அபிவிருத்தி நலனில் தொழிலாளிகள் ஈடுபட்டுக் கொண்டாலொழிய அவர்களது ஊதியமும் வேலைவாய்ப்புமே கேள்விக் குறியாக மாறிவிடலாம் என்பதை அவர்கள் உணர வேண்டும் என்று மிரட்டியவர் இப்போதிருக்கும் சேர்மன் பாஸ்கர் மித்தர்.

## தோழனே! பாதை தெரிகிறது பார்!!

ஆனால் தொழிலாளர்களுக்கு தெரியும், பாஸ்கர் மித்தர் சொல்லும், கம்பெனியின் அபிவிருத்தி! தங்களைக் கசக்கிப் பிழிவதினாலும் குறைந்த கூலி கொடுப்பதினாலும் தான் அதிகரித்துக்கொண்டிருக்கிறது என்று! இந்த அபிவிருத்தியில் தொழிலாளிகள் தங்களை ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும் என்று பாஸ்கர் மித்தர் கூறியது 1970 வருடத்திய ஹாஸ்யமாக இருக்கலாம். ஆனால் வர்க்க உணர்வு கொண்ட தொழிலாளிகள் 'மயிலே? மயிலே! இறகு போடு'' என்று சொன்னால் எந்த முதலாளியும் கொடுத்ததில்லை. அதிகமாக கொழுத்திருக்கும் மெட்டல் பாக்ஸ் நிர்வாகம் உறுதியான போராட்டத்தினாலன்றிப் பணிந்ததில்லை என்பதை மெட்டல்பாக்ஸ் தொழிலாளர்களாகிய நாம் உணரவேண்டும்.

மெட்டல் பாக்ஸ் தொழிலாளர் சங்கம் சென்னை.

# இந்திராகாங்கிரசில் குடுமிபிடி சண்டை

## "சோசலிச" பேரவைக்குப் போட்டியாக ஒரு நேரு பேரவை

புதுடெல்லி, ஆக 29—

இந்திரா காங்கிரசுக்குள் கோஷ்டிப் பிரிவினையும் பூசலும் ஏற்பட்டு, அது வலுத்து வருகிறது, கட்சியின் மேல் மட்டத்திலிருந்து கீழ்மட்டம் வரையும் இந்தப் போக்கு நிலவுகிறது இது குறித்து பிரதமர் இந்திரா காந்திக்கும், கட்சித்தலைவர் சங்கர்தயாள் சர்மாவுக்கும் பெரிதும் கவலையை உண்டு பண்ணியுள்ளதாம்.

இந்திரா காங்கிரசில் உள்ள ஒரு பிரிவினர் ஏற்கனவே சோசலிசப் பேரவை என்ற பெயரால் ஓர் அமைப்பை நடத்திவருகிறார்கள் கட்சியிலுள்ள மற்ற பிரிவினரையும் மத்திய அரசின் நடவடிக்கைகளையும் சோசலிசப் பேரவையினர் வன்மையாகக் கண்டித்து வருகின்றனர். மத்திய அமைச்சரவையிலுள்ள மூத்த அமைச்சர்களைக்கூட இவர்கள் விட்டு வைப்பதில்லை.

### நேரு பேரவை

சோசலிசப் பேரவை நடத்தும் தாக்குதலால் எரிச்சலடைந்த மூத்த அமைச்சர்களும் மற்ற தலைவர்களும் சோசலிசப் பேரவைக்கு எதிராக போட்டிப்பேரவை ஒன்றை கட்சிக்குள் நிறுவத் தூண்டியதாகத் தெரிகிறது.

இதன் விளைவாக 'நேரு பேரவை' என்ற பெயரில் புதிய அமைப்பு ஒன்று இந்திரா காங்கிரஸ் கட்சியில் துவக்கப்பட்டிருக்கிறது. விகரம் மகாஜன் என்பவர் இந்தப் பேரவையைத் துவக்கியிருக்கிறார்.

''அரசியல்பொருளாதார சமுதாய கோட்பாடுகளில் நேருவின் அணுகுமுறைகளை ஆராய்வதும்இவைதொடர்பாக அவர் கொண்டிருந்த கருத்துக்களை பரப்புவதும் நேரு பேரவையின் நோக்கமாகும்'' என்று விகரம் மகாஜன் அறிவித்துள்ள போதிலும் கட்சியில் உள்ள சோசலிசப்பேரவைக்கு எதிராக இந்தப் பேரவை துவக்கப்பட்டிருப்பதாகவே அனைவரும் கருதுகின்றனர்.

### இந்திராகாந்திக்கு எரிச்சல்

பேரவைஎன்ற பெயரால் சிலர் தனித் தனிக் குழுக்களாகப் பிரிந்து மறைமுகமாகச்சரவிடத் தொடங்கியிருப்பது குறித்து பிரதமர் திருமதிஇந்திராகாந்தி எரிச்சலும் கவலையும் அடைந்திருப்பதாகக் கூறப்படுகிறது

கட்சிக்குள் கோஷ்டிப் பூசல் வலுக்க இடமளிக்கக் கூடாது என்பதற்காக பிரதமர் இந்திராகாந்தி இந்த நேருபேரவையை ஆதரிக்க முன் வரவில்லை என்றும் தெரிகிறது.

நேருபேரவையை துவக்கி வைக்க பிரதமர் இந்திராவின் பிரதம ஆலோசகர் என்று கூறப்படும் மத்திய அமைச்சர் உமாசங்கர் தீட்சித் அழைக்கப்பட்டிருந்தார் ஆனால் அவர் பேரவையைத் துவக்கிவைக்கப் போகக்கூடாது என்று பிரதமர் இந்திரா கடைசி நேரத்தில் தீட்சித்தை தடுத்து விட்டாராம்,

### கண்டனக் கூட்டம்

இதற்கிடையில் நேரு பேரவை துவக்கப்பட்டிருப்பதைக் கண்டித்து இந்திரா காங்கிரசில் உள்ள சில மூத்த உறுப்பினர்கள் கூட்டம் நடத்தியிருக்கிறார்கள். சோசலிசப் பேரவையைச் சேர்ந்தவர்களும் இவர்களுடன் இணைந்து நேரு பேரவைக்கு கண்டனம்தெரிவித்திருக்கிறார்கள்.

விபூதி மிஸ்ரா தலைமையில் 25 உறுப்பினர்கள்கூடி நடத்திய இந்தக் கண்டனக் கூட்டம், நேரு பேரவையைத் துவக்கி கட்சிக்குள் பூசலைக் கிளப்புவோர்மீது தக்க நடவடிக்கை எடுக்குமாறு பிரதமர் இந்திராவுக்கு கோரிக்கை விடுத்துள்ளது நேரு பேரவையைத் தடைசெய்யக் கோரி பிரதமரிடம் மனு கொடுக்க இவர்கள் முடிவு செய்துள்ளனர்.

குஜராத்தில் நடைபெறவிருக்கும் அகில இந்திய இந்திரா காங்கிரஸ் மாநாட்டின்போது இந்தப் பிரச்சினையை எழுப்புவதென்றும் அவர்கள் முடிவு செய்துள்ளனர்.

இந்திரா காங்கிரசில் மூன்றாவது கோஷ்டி ஒன்றும் இருந்து வருகிறது. 'உழவர் பேரவை' என்ற பெயரில் இந்த மூன்றாவது கோஷ்டி இயங்கி வருகிறது. நிலப் பிரபுக்களால் இந்தப் பேரவை நடத்தப்பட்டு வருவதாகக் கூறப்படுகிறது

இந்திரா காங்கிரசில் உள்ள சோசலிசப் பேரவையைச் சேர்ந்தவர்களுடன் உழவர் பேரவையினர் கடும் விரோதம் பாராட்டி வருகிறார்கள். நேரு பேரவையினருடன் இவர்கள் இணைந்து ,சோசலிசப் பேரவையினரோடு மோதத் திட்டமிட்டிருப்பதாகத் தெரிகிறது.

இந்திரா காங்கிரஸ் கட்சியின்மேல் மட்டத்திலிருந்து அடித்தளம்வரை, அனைத்து தரப்பினரும் இப்படி சிறு சிறு கோஷ்டிகளாகப்பிரிந்து ஒருவரை ஒருவர் பகைத்துக் கொண்டு வருவது குறித்து பிரதமர் இந்திராவும், அகிலஇந்திய இந்திரா காங்கிரஸ் தலைவர் சங்கர்தயாள் சர்மாவும் பெரிதும் கவலையுற்றிருப்பதாகத் தெரிகிறது.

விஜயவாடாவில் பல்லாயிரக் கணக்கில் திரண்ட விவசாயிகள் பேரணியில் ஒரு பகுதி.

## திருச்சி தி. மு. க. வில் பிளவு

# வட்டச் செயலாளரை எதிர்த்து தி. மு. க. உண்ணுவிரதம்

திருச்சி, ஆக. 27—

தி மு.கழக வட்டச் செயலாளரை எதிர்த்து தி. மு. கழகத்தினரே உண்ணுவிரதம் இருந்து வருகிறார்கள்.

திருச்சி மாவட்டத்தில் உள்ளது உடையார்பாளையம் இங்கு கே. எஸ் கணேசன் என்பவர் தி மு கழக வட்டச் செயலாளராக இருக்கிறார். இவர் சர்வாதிகாரப்போக்கில் நடந்து கொள்வதாக தி. மு. க. வினரே அவர்மீது புகார் செய்துள்ளனர்.

### நடவடிக்கை இல்லையே

கணேசன் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தி மு கழக மேலிடத்தை உடையார் பாளையம் தி மு க வினர் கேட்டிருந்தார்கள் ஆனால் அவர் மீது எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வகையில் ஜெயங்கொண்டம் நகரில் தி மு கவினர் 7பேர் கடந்த வெள்ளிக்கிழமை யன்று உண்ணுவிரதம் ஆரம்பித்தனர்.

அதைத் தொடர்ந்து ஜெயங்கொண்டம் தி மு க பிரமுகர் சி கே. துக்காராம் உள்பட 15பேர் உண்ணுவிரதம் துவங்கினர். இவர்களையும் சேர்த்து உண்ணுவிரதம் இருப்போர் எண்ணிக்கை 22 ஆகிறது,

### தி. மு .க. பிளவு: கருணாநிதி பார்த்தார்

திருச்சி, ஆக. 29—

உடையார் பாளையம் தாலுகா தி. மு கழகத்தில் ஏற்பட்டுள்ள பிளவை தி. மு க தலைவர் திரு மு. கருணாநிதி இன்று காலையில் ஜெயங்கொண்டத்தில் நேரில்காணும் வாய்ப்பைப் பெற்றார்.

ஜெயங்கொண்டம் டவுன் தி. மு. க, செயலாளரும் மாஜிஎம்.எல்.ஏயுமான திரு ஏ. கே. மூர்த்தியும் ஒரு மாது உட்பட 26 பேர்களும் உடையார் பாளையம் தாலுகா திமுக செயலாளர் திரு கே எஸ். கணேசன் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கக் கோரி ஜெயங்கொண்டம் அண்ணா சிலைக்கு முன் 25ல முதல் உண்ணாவிரதமிருந்து வருகிறார்கள்

இன்று காலையில் திரு மு கருணாநிதி ஒரு திருமணத்தில தலைமை தாங்க ஜெயங் கொண்டத்துக்குச் சென்று திருமண வீட்டிலிருந்து திரும்பும்போது காரை அங்கு நிறுத்தி, திரு. ஏ. கே. மூர்த்தியை காரினருகே அழைத்தார், திரு மூர்த்தி காரினருகே வராமல், தமது முகத்தை அப்பால் திருப்பிக் கொண்டார்,

பின்னர் திரு கருணாநிதி அங்கிருந்து டால்மியாபுரத்துக்குச் சென்றார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில். தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே முத்தையா.

# உ. பி. யில் ஜாதிவெறிக் கொடுமையை எதிர்த்து: பெண்கள் ஊர்வலம்

அலகாபாத், ஆக. 26—

பிரதமர் இந்திரா காந்தியின் சொந்த ஊரான அலகாபாத்தில் சாதி வெறி பயங்கரமாக உள்ளது.

தாழ்த்தப்பட்ட சாதி மக்களை இந்துக்கள் மிகவும் கொடுமைப் படுத்தி வருகின்றனர். இந்தக் கொடுமைகளை கண்டிக்கும் பொருட்டு 50க்கும் மேற்பட்ட தாய்மார்கள் தங்களது கைக்குழந்தைகளுடன் ஊர்வலமாக மாவட்ட நீதிபதி வீட்டுக்கு முன்னால் சென்றனர். வீட்டிற்கு முன்னால் உட்கார்ந்து கொண்டு தங்களுடைய உரிமைக் குரலை எழுப்பினர்.

ஆக. 20-ம் தேதியன்று தாழ்த்தப்பட்ட மக்களின் வீடுகளுக்கு தீ வைக்கப்பட்டதாகவும், அது குறித்து இது வரை யாரும் கைது செய்யப்படாததே இதற்குக் காரணம் என போலீஸ் அதிகாரி கூறியுள்ளார்.

## ஐ. என். டி. யூ. சி..

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

போராட்டக்கமிட்டி பம்பாயில் கூடி நிலைமையை பரிசீலிக்கவேண்டும் என்று ஏற்கனவே முடிவு செய்திருக்கும்போது, இப்படி தான்தோன்றித்தனமாக வேலைநிறுத்தத்தை வாபஸ் பெற்றிருப்பது நாணயமற்ற செயலாகும்,

28—8—72காலை 11மணிக்குள் டில்லிக்கு வந்துசேரும்படி 27—8—72 மாலை 6மணிக்கு எனக்கு செய்தி கிடைத்தது. சம்பிரதாயப் பூர்வமான அழைப்பை காலதாமதமாக எனக்கு அனுப்பி, இந்த இறுதிப் பேச்சு வார்த்தைகளில் ஐ. என். டி. யூ. சி வை கலந்து கொள்ளவிடாமல் தடுத்துள்ளனர்.

### ஒன்றுபட்டு போராடுவீர்

இந்நிலையில் 100க்கு 100 சதமானம் இந்த வேலை நிறுத்தத்தை வெற்றிகரமாக நடத்தி வந்துள்ள தமிழக சிமெண்ட் தொழிலாளர்களும் அவர்களுடைய தொழிற்சங்கங்களும் மத்திய அரசின் முதலாளிகளுக்காதரவான இந்த தலையீட்டை எதிர்த்து தொடர்ந்து ஒன்றுபட்டுப் போராடுமாறு எல்லா சிமிண்ட்தொழிலாளர்களையும், தொழிற்சங்கங்களையும் அறைகூவி அழைக்கின்றேன்,

# ஆட்டோ மேஷனுக்கு எதிர்ப்பு

கல்கத்தா, ஆக. 29—

கல்கத்தாவில் இந்திய ஷிப்பிங் கார்பரேஷன் கம்பெனியில் உள்ள ஊழியர்கள், கடந்த ஒரு மாதத்திற்கும் மேலாக, ஆட்டோ மேஷனை (தானியங்கி யந்திரங்கள்) எதிர்த்து போராடி வருகிறார்கள். இத்தகைய யந்திரங்கள் புகுத்தப்படுவதால் வேலை வாய்ப்பு இல்லாமல் போகும். மேலும் ஏற்கனவே வேலையுள்ளவர்களும், வேலையில்லாமல், வெளியே தள்ளப்படுவார்கள் இதை எதிர்த்து இந்திய ஷிப்பிங்கார்ப்பரேஷன் ஊழியர்கள் ஆர்ப்பாட்டங்கள், ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள், நடத்திப் போராடி வருகிறார்கள்.